## Kamadhenu Vahana

Kamadhenu is a vahana for the goddess in Shiva temples. She is the mother of all cattle. Her body is of a cow and she has the face of a woman, with a pair of horns. Her tail is that of a peacock. Two other divine cows are Surabhi and Nandini. Many scholars believe that these are other names for Kamadhenu, while some believe that they are the names of different divine cows. There are also several Kamadhenus. All of them, however, are attributed with magical powers and the ability to give the sweetest milk.

Kamadhenu in some texts has her own kingdom called Goloka. In other texts, she is said to be under the care of sage Vasistha. Once when Vishwamitra tried to seize her from Vasistha, Kamadhenu created a large army and she herself became a terrible-looking monster. Vishwamitra was defeated and then resolved to become a sage, even more powerful than Vasistha. Some of her children include Ajasa, Ekapat, Ahirbudhnya, Tvasta and Rudra.

It is significant to note that Parvati as Annapurna, is also the goddess possessing the power to give unlimited food, just as Kamadhenu provides unlimited milk.

## காமதேனு வாகனம்

சிவன் கோவில்களில் தேவியின் வாகனம் காமதேனு. அவள் அனைத்து பசுக்களுக்கும் தாய். அவள் உடம்பு ஒரு பசுவினுடையதாகவும், முகம் இரு கொம்புகளைக் கொண்ட ஒரு பெண்ணினுடையதாகவும் இருக்கும். அவள் வால் மயில் தோகையைப் போல் அமைந்திருக்கும். வேறு இரு தேவலோக பசுக்கள் சுரபியும் நந்தினியுமாகும். பல அறிஞர்கள் இந்த இரண்டும் காமதேனுவின் மாற்றுப் பெயர்களென்று கூறுகிறார்கள். ஆனால் இவை வேறு இரண்டு பசுக்கள் என்ற கருத்தும் நிலவுகிறது. காமதேனுவிலும் பல உள்ளன. அவை யாவும் மந்திர சக்தி கொண்டவைகளாகவும், இனிப்பான பாலை சுரப்பதாகவும் வர்ணிக்கப்படுகின்றன.

சில நூல்களில் கோலோகம் என்னும் ராஜ்ஜியம் காமதேனுவிற்கு உரித்தானது என்றும் வேறு சில நூல்களில், காமதேனு வசிஷ்ட முனிவரின் பாதுகாப்பில் இருந்த விவரமும் காணப்படுகின்றன. விஸ்வாமித்திரர் ஒரு முறை அதை வசிஷ்டரிடமிருந்து கவர்ந்து செல்ல முயன்றபோது, காமதேனு ஒரு பெரிய சைன்யத்தை உருவாக்கியதோடு தானும் உக்கிர உருவம் கொண்டது. விஸ்வாமித்திரர் தோற்கடிக்கப்பட்ட பின் அவர், வசிஷ்டரை விட சக்தி வாய்ந்த முனிவராவதற்கு முடிவு செய்தார். காமதேனுவின் சில குழந்தைகள் அஜஸா, ஏகாபத், ஆஹிர்புத்ன்யா, த்வஸ்தா மற்றும் ருத்ரா.

காமதேனு அளவில்லா பாலைச் சுரப்பது போலவே அன்னபூரணி உருவத்தில் பார்வதி தேவியும், அளவில்லா அன்னம் வழங்கும் சக்தியுடைய கடவுள் என்பது குறிப்பிடத்தக்கது.

## Gandharva Vahana

The Gandharva and his companion Gandharvi are unique vahanas found in the Mylapore Kapaleeswara temple.

Gandharvas are a group that belong to the Devas or celestial beings. They are the sons born to Kashyapaprajapati, of his wife Aristha. Another *Purana* says that they were born from the nose of Brahma. It appears that iconographically, there are only male Gandharvas, their female equivalents being *apsaras*.

They are mentioned in several contexts. All of them allude to their divine status. They are worshippers of the moon and Brahma and have the ability to fly. They live mostly in the sky and prepare *soma* juice for the Gods. They are also supposed to entertain the celestials with divine music when there are banquets in heaven. This explains the vahana images holding a veena in their hands. The *Atharvana Veda* counts more than 6,300 of them. Their leader is Chitraratha. They are also the enemies of the denizens of the underworld, the Nagas.

Gandharvas are chiefly invoked and propitiated because of their tendency to assume the appearance of handsome men and tempt unsuspecting women. The Gandharva type of marriage is one where there is mutual attraction and the marriage continues for as long as both parties prefer it.

## கந்தர்வ வாகனம்

கந்தர்வன் மற்றும் அவர் துணைவி கந்தர்வி வாகனங்கள் மயிலை கபாலீசுவரர் கோவிலில் காணப்படும் அபூர்வ வாகனங்கள்.

தேவலோகத்தை சேர்ந்த அவர்கள் கச்யபப்பிரஜாபதிக்கும் அவர் மனைவி அரிஷ்டாவிற்கும் பிறந்த புதல்வர்கள். மற்றொரு புராணம் அவர்கள் பிரம்மனின் மூக்கிலிருந்து தோன்றியதாகக் கூறுகிறது. படிவ உருவில் ஆண் கந்தர்வர்களைத்தான் காண்கிறோம். பெண் கந்தர்வர்கள் அப்ஸரஸ் என அழைக்கப்படுகிறார்கள்.

பல இடங்களில் அவர்களைப் பற்றிய குறிப்புகளைக் காணலாம்; அவை அனைத்துமே அவர்கள் தேவலோகத்தை சேர்ந்தவர்களாகவே கூறுகின்றன. பிரம்மனையும் சந்திரனையும் வழிபடும் அவர்கள் பறக்கும் சக்தி உள்ளவர்கள். அவர்கள் பெரும்பாலும் ஆகாயத்திலேயே வசிப்பதுடன் தேவர்களுக்குத் தேவையான சோமரஸத்தைத் தயாரிப்பதில் ஈடுபட்டிருப்பவர்கள். தேவலோகத்து விருந்துகளில் இவர்கள் கானம் இசைத்து தேவர்களை மகிழ்விப்பதாக கூறப்படுகிறது. கந்தர்வ வாகனங்களின் கைகளில் வீணை இருப்பது இந்த கூற்றை உறுதி செய்கிறது. அதர்வண வேதத்தின்படி 6,300 கந்தர்வர்கள் இருக்கிறார்கள். அவர்களின் தலைவன் சித்ரரதா. பாதாள லோகத்தின் வாசிகளான நாகர்கள் என்னும் அசுரர்கள் இவர்களின் எதிரிகள்.

கந்தர்வர்கள் அழகிய ஆண் உருவங்கள் எடுத்து பெண்களை வசியப்படுத்தும் தன்மை கொண்டவர்களாதலால், அவர்களை மக்கள் தொழுது அவர்களை திருப்திப்படுத்த முயல்கிறார்கள். ஒரு ஆணும் பெண்ணும் தாமாகவே காதல் வசப்பட்டு திருமணம் செய்து கொள்வது கந்தர்வ விவாஹம் என அழைக்கப்படும். இருவரும் மனமொப்பி சேர்ந்து வாழ நினைக்கும் வரையில் இந்த திருமணங்கள் நீடிக்கும்.

## Bootha Gana

The Bootha Gana is a male of ferocious aspect. The ferocity is indicated by large eyes, a thick and curving moustache, bared teeth and long nails. This is a vahana for Shiva and in temples such as Mylapore Kapaleeswara, there is a female counterpart in the form of the goddess called Boothaki.

Bootha Ganas are usually shown in human form and as rather stout and stocky. However, the many *Puranic* references to them mention several other forms. They find mention, as always, around Shiva and as members of his large army. The references to them occur in *Brahma Purana*, *Harivamsa Purana*, *Linga Purana*, *Vayu Purana*, the Ramayana and the Mahabaratha. The *Tirumurai* has several references to Shiva being surrounded by them; their variety is most diverse and imaginative in the *Mathsya Purana*. Some are lean, others stout and still others lean but with a big belly. They have varying heights. Some have the faces of a tiger, a lion or an elephant. Others are not human at all and look more like goats. Some shine like fire. Their skin and hair colour vary. Some have pleasing countenances and others, a ferocious nature. They bear several weapons and either wear no clothing or drape themselves with *darba* grass, animal hide and so on. Regardless of their sizes and shapes, they all hold Shiva in great esteem and are very brave. The *Purana* counts more than 10 million Bootha Ganas.

The first invocatory verse of the Tamil collection of verses, the *Purananooru* (1st-3rd century, ACE) refers to Shiva, followed by 18 Ganas who sing his praises.

Most Shiva temples have sculptures of the Bootha Ganas around the outer wall of the main sanctum, in the upper part, just under the roof. They are shown in comic poses and allow the sculptor to express his creativity and sense of humour. Some of the best examples can be seen in the Shiva temple of Pullamangai near Kumbakonam, on the Thiruvaiyaru route and in the Dandeeswara temple at Velachery, Chennai.

## பூத கணம்

வீரியம் மிக்க ஒரு ஆண் உருவம் கொண்டது பூத கணம். அதனுடைய உக்கிரம், பெரிய கண்கள், அடர்ந்த வளைந்த மீசை, வெளியே தெரியும் பற்கள் மற்றும், நீண்ட கூர்மையான நகங்களால் வெளிப்படுத்தப்படுகிறது. இது சிவனின் வாகனம். மயிலை கபாலீசுவரர் கோவில் போன்ற சில கோவில்களில் இந்த பூதகணத்திற்கு பூதகியென்ற பெண் இணையும் உண்டு.

பூத கணங்கள் அநேகமாக, பருத்துத் திரண்ட மனித உடல்கள் கொண்டவையாகவே சித்தரிக்கப்படுகின்றன. அவை சிவனின் பெரும் படையின் அங்கமாகத் தோன்றுகின்றன. பிரம்ம புராணம், ஹரிவம்ச புராணம், லிங்க புராணம், வாயு புராணம், ராமாயணம் மற்றும் மஹாபாரதத்திலும் இவைகளைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. திருமுறையும் அநேக இடங்களில் சிவன் இவர்கள் சூழ இருப்பது பற்றிக் கூறுகிறது. மத்ஸ்ய புராணத்தில் இவர்கள் பல விதங்களில் சித்தரிக்கப்பட்டுள்ளார்கள். சில மெலிந்தும், சில பருமனாகவும் மற்றும் சில பெரிய வயிறுகளைக் கொண்டவர்களாகவும் வர்ணிக்கப்படுகிறார்கள்; அவைகளின் உயரமும் வேறுபடுகின்றன. சில புலி, சிங்கம் அல்லது யானை முகத்துடன், காணப்படுகின்றன. வேறு சில, மனிதரே அல்லாமல், ஆடுகள் தோற்றம் கொண்டவை. சில நெருப்பைப் போல ஜ்வலிக்கின்றன. அவைகளின் தோல், மற்றும் முடியின் வண்ணமும் வெவ்வேறாகக் காட்சியளிக்கின்றன. சில மென்மையான தோற்றமும் சில கடுமையான தோற்றமும் கொண்டுள்ளன. பலவித ஆயுதங்களுடன் காணப்படும் இவை நிர்வாணமாகவோ, தர்பைப் புல் மற்றும் தோலாலான உடைகள் அணிந்தோ காணப்படும். எவ்வித தோற்றம் கொண்டவையானாலும் அவை அனைத்துமே சிவனிடம் பக்தி கொண்ட வீரர்கள். புராணங்கள் பத்து கோடிக்கும் அதிகமான பூத கணங்கள் இருந்ததாகக் கூறுகின்றன.

முதல் தமிழ் கவிதை தொகுப்பான புறநானூறு (எண் 1–3 C, ACE) சிவனைத் தொடர்ந்து 18 பூதகணங்கள் அவர் புகழ் பாடி வருவதைச் சித்திரிக்கிறது.

பல கோவில்களிலும், கூரையின் கீழே, கர்ப்பக்கிருஹத்தின் வெளிச் சுவர்களின் மேற்புறம் பூதகணங்களின் சிலைகள் வைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். அவைகள் சிற்பிகளின் படைப்புத் திறனையும், நகைச்சுவை உணர்வுகளையும் காட்டும் வகையில் பல்வேறு வினோத தோற்றங்களில் அமைந்திருக்கும். கும்பகோணம் அருகே திருவையாறு செல்லும் வழியில் உள்ள புல்லமங்கையிலும் சென்னை வேளச்சேரியில் உள்ள தண்டீசுவரர் கோவிலிலும் இவைகளுக்கான சிறந்த உதாரணங்களைக் காணலாம்.

## Tharakasura Vahana

Tharakasura is a rare vahana that bears Muruga in the Kapaleeswara temple, during the Panguni festival.

This demon was a great devotee of Shiva and obtained a boon from him that only Shiva's son could kill him. Having received this boon, he became a terror and tormented the world. Finally Shiva's son, Muruga, vanquished him. Tharakasura was the father of Taraksa, Kamalaksa and Vidyunmalika. Shiva as Tripurantaka killed all the three during the Tripuradahana.

## தாரகாசுர வாகனம்

மைலாப்பூர் கபாலீசுவரர் கோவிலில் முருகப் பெருமானின் ஊர்வலத்தில் உபயோகப்படுத்தப்படும் அபூர்வ வாகனம் இது.

தாரகாசுரன் சிவனின் பெரிய பக்தனாக சிவனின் மகனால் மட்டுமே தனக்கு மரணம் என்ற வரத்தை சிவனிடமிருந்து பெற்ற அசுரன். இந்த வரம் பெற்ற மமதையில் அவன் உலகத்தையே அச்சுறுத்தி வந்தான். இறுதியில், சிவனின் மகனான முருகன் அந்த அசுரனை அழித்தார். தாரகாசுரன், தாரக்க்ஷா, கமலாக்ஷா, வித்யுன்மாலிகா ஆகியோரின் தந்தை. சிவபெருமான், திரிபுராந்தகனாக வந்து திரிபுர தகனம் செய்த போது இம்மூன்று அசுரர்களையும் அழித்தார்.

## Narakasura Vahana

This vahana can be seen at the Kalikambal temple in Chennai.

Narakasura was born when Hiranyaksha carried away the Goddess of the Earth to the netherworld. When she was rescued by Vishnu, the Goddess requested him to save the son born out of her sad union. Vishnu took pity and gave the child the Narayana Astra and said, "Naraka, as long as this weapon is with you, nobody but me can kill you". Narakasura made Pragjyotisa, his capital and ruled the Asuras. He appointed 4 Asuras as the gatekeepers. They were Hayagriva (not to be confused with Vishnu's incarnation of the same name), Nisunda, Panchanada and Mura. The ten sons of Narakasura guarded his harem of 16,100 women captured from earth and heaven.

Narakasura met his death when he carried away the earrings of Aditi, Indra's mother and Indra's royal umbrella. Krishna, with his wife Satyabama, flew on the Garuda, to the capital city of Narakasura and killed him after a bitter battle.

The story however does not explain how this vahana is found in the temple for Parvati. It is therefore possible that the vahana was intended to represent another Asura but in the course of time, the name has been changed.

## நரகாசுர வாகனம்

சென்னையில் உள்ள காளிகாம்பாள் கோவிலில் இந்த வாகனத்தைக் காணலாம்.

இரண்யாக்ஷன் பூமிதேவியை பாதாள லோகத்திற்குக் கொண்டு சென்றபோது, விஷ்ணுவால் காப்பாற்றப்பட்டாள். தனக்கு அந்த விபரீத சேர்க்கையால் பிறந்த மகனைக் காப்பாற்றும்படி அவள் விஷ்ணுவை வேண்ட, அவரும் அக்குழந்தைக்கு நாராயண அஸ்திரத்தைக் கொடுத்து, தன் ஒருவரால் மட்டுமே அவனைக் கொல்ல முடியுமென்ற வரத்தையும் அளித்தார். ப்ரக்ஜ்யோதிஸாவை தன் தலைநகரமாக்கிக் கொண்டு நரகாசுரன் அசுரர்களின் அரசனாக ஆட்சி புரிந்து வந்தான். அவன் ஹயக்ரீவன், (இது விஷ்ணுவின் அவதாரமான ஹயக்ரீவர் இல்லை) நிஷுண்டன், பஞ்சநதன் மற்றும் முரன் என்ற நான்கு அசுரர்களை தன் வாயிற்காப்போன்களாக அமர்த்தினான். பூமியிலிருந்தும், தேவலோகத்திலிருந்தும் கைப்பற்றிக் கொண்டு வரப்பட்ட 16,100 பெண்களைக் கொண்ட அவனுடைய அந்தப்புரத்தை நரகாசுரனின் 10 மகன்களும் காவல் காத்தனர்.

இந்திரனின் தாய், அதிதியின் காதணிகளையும், இந்திரனின் குடையையும் நரகாசுரன் கவர்ந்து சென்ற போது கிருஷ்ணன், தன் துணைவி சத்யபாமாவுடன் கருடனின் மேல் சவாரி செய்து நரகாசுரனின் தலைநகருக்கே சென்று, ஒரு கடும் போருக்குப் பிறகு நரகாசுரனை அழித்தார்.

பார்வதியின் கோவிலில் இந்த வாகனம் இருக்கும் மர்மத்தை இந்தக் கதை கூறவில்லை. வேறு ஒரு அசுரனின் பேரில் இந்த வாகனம் ஆதியில் ஏற்படுத்தப்பட்டு, காலப்போக்கில் பெயர் மாற்றம் நேர்ந்திருக்கலாமென்று அனுமானிக்கப்படுகிறது.

## Purushamriga Vahana

The Purushamriga is an unusual vahana found only in Shiva temples and that too only in those in and around Madras and Kanchipuram. The vahanas in the Kanchipuram's Ekambareswara temple and Chennai's Kapaleeswara temple are the more famous ones.

The form of this vahana consists of the body similar to a lion with the head and hands of a man. The story of this beast occurs in the Mahabharata. Yudhishtra requests Bhima to invite the Purushamriga for a sacrifice. Bhima does so, but is warned that while accompanying the Purushamriga, he has to follow two stipulations. Bhima must always walk in front and the distance must not be less than 4 *kaadham* (approximately 4 miles) and that if Bhima transgresses this, he will be eaten by the Purushamriga.

They begin travelling and to maintain distance, Bhima routinely throws a stone that transforms into a Shiva temple and the beast halts to complete a puja. However, at one point, the distance becomes closer and immediately the Purushamriga demands to eat the part of Bhima that was within the boundary. They seek the judgement of Yudhishtra who agrees that one part of Bhima must be eaten. So Bhima goes to heaven. In another version, the beast blesses Yudhishtra for his honesty and does not pursue its case.

The story does not explain the rarity of the vahana but this is the only mythological reference.

## புருஷாம்ருக வாகனம்

சிவன் கோவில்களில் மட்டுமே, அதுவும் சென்னை மற்றும் காஞ்சி வட்டாரங்களில் மட்டுமே காணப்படும் அபூர்வமான வாகனம் இது. இவைகளில் காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோவிலிலும், சென்னை கபாலீசுவரர் கோவிலிலும் உள்ள வாகனங்கள் மிகவும் பிரசித்தியானவை.

இந்த வாகனத்தில் காணப்படும் உருவம், சிங்கம் போன்ற ஒரு மிருகத்தின் உடலும், மனிதனுடைய தலையும், கைகளும் கொண்டது. இந்த மிருகத்தின் கதையை மஹாபாரதத்தில் காணலாம். யுதிஷ்டிரர் பீமனை ஒரு யாகத்திற்கு புருஷாம்ருகத்தை அழைக்குமாறு கூறுகிறார். அதை செய்யும் பீமனிற்கு இரண்டு எச்சரிக்கைகள் விடுக்கப்படுகின்றன. அம்மிருகத்தின் முன்னால் பீமன் செல்ல வேண்டுமென்றும், அவர்களுக்கு இடையே நான்கு காத தூரம் (ஏறத்தாழ நான்கு மைல்கள்) இருக்க வேண்டுமென்பது புருஷாம்ருகத்தின் கட்டளை. இதை மீறினால், அம்மிருகம் பீமனை உண்டு விடும்.

அவர்கள் பயணத்தை துவங்கியதும், பீமன் தமக்கிடையே உள்ள தூரத்தைக் கணிப்பதற்காக அவ்வப்போது ஒரு கல்லை எறிய, அது உடனே சிவன் கோவிலாக மாறி வந்தது. அம்மிருகம் சிவ பூஜை செய்வதற்காக ஒவ்வொரு இடத்திலும் தாமதித்தது. ஒரு இடம் வந்த போது இடையே இருந்த தூரம் குறைந்து, அம்மிருகம் தன் எல்லைக்குள் உள்ள பீமனின் உடலின் பாகத்தைத் தான் உண்ண வேண்டுமென்றது. அவர்கள் யுதிஷ்டிரரிடம் நீதி சொல்லக் கேட்கிறார்கள். யுதிஷ்டிரரும் மிருகத்தின் பக்கம் நியாயம் இருப்பதாகக் கூறவும் மிருகம் பீமனின் உடலிலிருந்து ஒரு பாகத்தை தின்றது. பீமன் இறந்து, சுவர்க்கத்தை அடைகிறான். வேறொரு விதமாகவும் கூறப்படும் இக்கதையில், மிருகம் யுதிஷ்டிரரின் பாரபக்ஷமற்ற நியாயம் வழங்குதலை மெச்சி தன் கோரிக்கையை கைவிட்டு விடுகிறது.

இக்கதையில் இந்த வாகனம் ஏன் பரவலாக உபயோகத்தில் இல்லையென்பதைப் பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. இந்த மிருகம் தொடர்பான குறிப்பு புராணத்தில் இது ஒன்றுதான்.

## Gandabherunda Pakshi

The Gandabherunda Pakshi is a two-headed bird that is today most popularly associated with the royal symbol of the Mysore kingdom. In many paintings, the Thanjavur Maratha kings are portrayed with a dagger depicting the *pakshi* as a motif. The same can also be seen in knuckle ornaments richly studded with gems. An example of an actual dagger is currently in the Metropolitan Museum of Art, New York. This motif is also common in pendants of necklaces.

This vahana is from the Mannargudi Rajagopala temple. The bird here has the face of a lion. The motif of a parrot with the face of a lion was a popular one in ornaments. The parrot symbolises love (for the warrior's country) and the lion, bravery. Occasionally, instead of a parrot's body, the bird has the body of an eagle.

The temple dates from the Chola times and was extensively renovated and enlarged during the Thanjavur Nayaka regime. It has the longest annual festival of 20 days and consequently has vahanas that are not found in other temples.

## கண்டபேருண்ட பக்ஷி

இந்த இரண்டு தலை பக்ஷி, இன்று பெரும்பாலும் மைசூர் சமஸ்தானத்தின் அரசு சின்னமாகத்தான் அறியப்படுகிறது. பல சித்திரங்களில் தஞ்சாவூர் மராத்திய அரசர்கள் இப்பக்ஷியை சின்னமாகக் கொண்ட வாளை ஏந்திக் கொண்டிருப்பதைக் காணலாம். இச்சின்னம் பல இரத்தினங்கள் பதிக்கப்பட்ட விரலில் அணியும் ஆபரணங்களிலும் காணப்படுகின்றது. இம்மாதிரியான ஒரு வாள், நியூ யார்க் மெட்ரோபாலிடன் கலைக் காட்சியகத்தில் உள்ளது. கழுத்தில் அணியும் நகைகளின் முகப்பாகவும் இந்தச் சின்னம் பரவலாக இருந்திருக்கின்றது.

இந்த வாகனம் மன்னார்குடி ராஜகோபாலஸ்வாமி கோவிலில் உள்ளது. பறவைக்கு சிங்க முகம். படைகளின் சின்னமாக சிங்கமுகம் கொண்ட கிளி அக்காலத்தில் பிரபலமாக இருந்திருக்கிறது. ஒரு போர் வீரனின் தாய்நாட்டுப்பற்றை கிளியும் அஞ்சாநெஞ்சத்தை சிங்கமும் குறிக்கின்றன. சில சமயங்களில் கிளியின் முகத்திற்கு பதிலாக பருந்தின் முகம் அமைக்கப்படுவதும் உண்டு.

இந்த சோழர் காலத்துக் கோவில், தஞ்சாவூரை நாயக்கர்கள் ஆண்ட காலத்தில் பல விதங்களில் விஸ்தரிக்கப்பட்டு புதுப்பிக்கப்பட்டது. 20 நாட்கள் தொடர்ந்து நடைபெறும் நீண்ட உற்சவம் அங்கு நிகழ்வதால், மற்ற கோவில்களில் இல்லாத பலவித வாகனங்களும் அங்கு உபயோகத்தில் உள்ளன.

## Hamsa Vahana

The Hamsa is fashioned like a swan, but is a divine bird, which has the ability to, in a portion of milk, separate the water and drink only the milk. For this skill, the Hamsa is a common motif in several ancient buildings, where poets gathered to compose and compete. There are several literary references to the bird in both Vaishnavite and Saivite verses that allude to the beauty and grace of the bird.

The bird is also a favoured messenger. Vedanta Desika uses this bird to carry Rama's message to Sita in the work *Hamsasandesha*.

This vahana is more popular for the goddess in Shiva temples. It is also the primary vahana for Brahma and Sarasvati. In the vahana, the bird always has a trailing creeper placed in its beak or a garland is attached, to achieve the same effect.

Kamban in his Ramayana, refers to the Hamsa as he describes Khosala. He says,

*Ladies, with eyes like fish, your gait is like that of the Hamsa with red feet!*
*Watch its little one sleep in a lotus flower.*
*As the buffaloes wade in the slush and get bitten by the Vaalai fish,*
*The frogs sing lullabies for the Hamsa, which drinks only the purest milk.*
*Such is the beauty of Khosala.*

(Naattu Padalam, 13)

## ஹம்ஸ வாகனம்

அன்னத்தைப் போல் அமைக்கப்பட்டிருக்கும் இந்த தேவலோகப் பறவையான ஹம்ஸத்திற்கு, பாலையும் நீரையும் சேர்த்து அளித்தால், நீரை நீக்கிவிட்டு பாலை மட்டும் பருகும் தன்மை இருந்ததாகக் கூறப்படுகிறது. இந்த குணத்திற்காக, ஹம்ஸம், பல கவிஞர்கள் ஒன்று சேர்ந்து போட்டிகள் நடத்தும் பழைய கட்டிடங்களின் மேல் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இந்தப் பறவையின் அழகை வர்ணிக்கும் பல பாடல்கள் சைவ வைணவ இலக்கியங்களில் உள்ளன.

இந்தப் பறவை தூது அனுப்ப பலரால் பெரிதும் விரும்பப்பட்ட ஒன்று. வேதாந்த தேசிகர் தன் ஹம்ஸசந்தேசம் என்னும் நூலில், இந்தப் பறவை மூலம் ஸ்ரீராமர் சீதைக்கு தகவல் அனுப்புவதை வர்ணிக்கிறார்.

சிவன் கோவில்களில், இந்த வாகனம் அம்பாளுக்காக அதிகமாக உபயோகப் படுத்தப்படுகிறது. பிரம்மனுக்கும் சரஸ்வதிக்கும் இதுவே முக்கிய வாகனம். அழகிற்காக, இந்த வாகனத்தில், பறவையின் மூக்கிலிருந்து ஒரு படரும் கொடியோ அல்லது பூமாலையோ வைத்திருப்பதைக் காணலாம்.

கோசலை நகரத்தை வர்ணிக்கும் கம்பன் இந்தப் பறவையைக் குறிப்பிடுகிறார். அவர், நாட்டுப் படலம் 13ம் பாட்டில்:

*சேல் உண்ட ஒண் கணாரின் திரிகின்ற செங்கால் அன்னம்,*
*மால் உண்ட நளினப் பள்ளி, வளர்த்திய மழலைப்பிள்ளை*
*கால் உண்ட சேற்று மேதி கன்று உள்ளிக் கனைப்பச் சோர்ந்த*
*பால் உண்டு, துயில, பச்சைத் தேரை தாலாட்டும் – பண்ணை.*

(கம்பராமாயணம் – பாலகாண்டம்)

## Kaakai Vahana

The vahana for the planet Saturn, the raven (*kaakai*), is not a common vahana in any temple. It is found only in the temple for Saturn in Tirunallar.

In Hindu mythology, Sani or Saturn is the son of Surya, the Sun God, and his wife, Chaya.

Saturn, according to Hindu astrology is a malefic planet and always needs to be propitiated. In recent decades, this temple has become a popular one and explains the affluence of the temple in possessing a vahana plated in gold.

## காக்கை வாகனம்

சனீசுவரனின் வாகனமான காகம் எல்லா கோவில்களிலும் காணப்படும் ஒரு வாகனம் அல்ல. அது திருநள்ளாரில் உள்ள சனி பகவானின் கோவிலில் மட்டுமே உள்ள ஒன்று.

புராணங்களின் படி சனி சூரியனுக்கும் அவர் மனைவி சாயாவிற்கும் புதல்வனாவார்.

இந்து ஜோஸிய சாத்திரம் சனியை ஒரு தீமையை விளைவிக்கும் கிரகமாகவும், அதனால் அதை திருப்தி செய்ய பலவித பரிகாரங்கள் செய்ய வேண்டியிருப்பதாகவும் கூறுகிறது. அண்மைக் காலங்களில் இந்த கோவில் மிகவும் பிரபலமாகிவிட்டது. இந்த கோவிலின் பொருளாதார வளமைக்கு, அங்கு செய்யப்பட்டிருக்கும் தங்கத்தகடுகலாலான காக்கை வாகனமே சான்று.

## Mayil Vahana

The *mayil* or peacock is the vahana for Muruga and is always found in Shiva temples, where the idol of Muruga is taken out in procession. In temples dedicated to Muruga, like Tiruchendur, it is the most important vahana and plated invariably with gold.

Called Ceyon or the red one, Murugan or Saravana in ancient Tamil literature, was a powerful God, revered for his valour in the battlefield and his lordship of the mountainous regions. Many scholars believe that his comparatively subsidiary status as a secondary God and son of Shiva came with the successive entry of Vedic Hinduism to the Tamil country, from the early part of the Christian era.

Arunagirinathar, a saint of the 15th-16th century composed several verses on Muruga in Tamil but only around 1,365 verses are available to us. Among these is the *Mayil Virutham*. These are a set of verses on the peacock. Usually, references to the peacock deal with its beauty, daintiness and gracefulness. The poet here however focuses on its more military qualities. In the second verse he says,

*The strong hill of Chakravaham splits into many pieces*
*The Krauncha hills get pulverised, the white-crested Meru,*
*And all the other seven hills, the earth and moon lose their bearings.*
*The many heads of Adisesha shake and the warring Asuras tremble*
*As the peacock dances*
*The fragrance of Shiva, who has the green goddess is everywhere*
*The one with Ganga in his locks conceded Saravana as the wise one*
*You bear that wise one on your feathers that*
*Rival the lustre of emeralds, oh peacock.*

## மயில் வாகனம்

முருகனின் வாகனமான மயில், முருகனின் வீதிவலம் நடத்தப்படும் அனைத்து சிவன் கோவில்களிலும் உள்ள ஒரு வாகனம். திருச்செந்தூர் போன்ற சிறப்பான முருகன் கோவில்களில், இதுவே முக்கிய வாகனமாக தங்கக் கவசம் அணியப் பெற்று இருக்கும்.

சிவப்பு நிறம் கொண்ட சேயோன், சரவணன், மலைப் பகுதிகளின் தலைவன், சிறந்த போர்வீரன் என்றெல்லாம் பண்டைய தமிழ் இலக்கியத்திலேயே புகழப்படும் சக்திவாய்ந்த கடவுள் முருகன். கிறிஸ்துவிற்குப் பின் வந்த ஆரம்ப காலங்களில், தமிழ்நாட்டின் எல்லைக்குள் வைதீக இந்துத்துவம் நுழைந்த பிறகுதான் சிவனின் புதல்வனாக இந்தப் பெருமான் இரண்டாம் இடத்திற்குத் தள்ளப்பட்டிருக்கக் கூடுமென்று பல அறிஞர்களும் கருதுகிறர்கள்.

15–16ம் நூற்றாண்டைச் சேர்ந்த அருணகிரிநாதர் முருகனைப் பற்றி பல பாடல்களை இயற்றியுள்ளாரெனினும், நமக்கு 1,365 பாடல்களே கிடைத்திருக்கின்றன. இவைகளில் ஒன்று மயில் பற்றி பாடப்பட்டிருக்கும் மயில் விருத்தம். பொதுவாக மயிலைப் பற்றிய பாடல்களில் அவற்றின் அழகும், ஒயிலும் ஒய்யாரமும் தான் சிலாகிக்கப்பட்டிருக்கும். ஆனால் இந்த நூல் மயிலின் வீரத்தைப் பாடுகிறது. அவர் இரண்டாம் செய்யுளில் சொல்கிறார்:

*சக்ரப் ரசண்டகிரி முட்டக் கிழிந்துவெளி*
*பட்டு க்ரவுஞ்ச சயிலந்*
*தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு*
*தனிவெற்பு மம்புவியுமெண்*
*டிக்குத் தடங்குவடு மொக்கக் குலுங்கவரு*
*சித்ரப் பதம் பெயரவே*
*சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்*
*திடுக்கிட நடிக்கு மயிலாம்*
*பக்கத்தி லொன்றுபடு பச்சைப் பசுங்கவுரி*
*பத்பப் பதங் கமழ்தரும்*
*பாகீ ரதிச்சடில யோகீ சுரர்க்குரிய*
*பரம வுபதேச மறிவிக்*
*கைக்குச் செழுஞ்சரவ ணத்திற் பிறந்தவொரு*
*கந்தச் சுவாமி தணிகைக்*
*கல்லார கிரியுருக வருகிரண மரகத*
*கலாபத்தி லிலகு மயிலே.*

## Kili Vahana

The *kili* or parrot is a vahana for the goddess and is usually found in Shiva temples, as in Vishnu temples, the goddess does not independently proceed outside the temple precincts. In literature and mythology, the parrot is most closely associated with Kama or Manmatha, the God of Love, as his vahana. There is a reference in the *Civakachinthamani* [(2057) - Suramanjariar Ilambagam] to the heroine praying to the God of Love and promising him a Kili Vahana if he answers her prayers.

With its association to love, the parrot is, in literature the favoured bird used by lovers to send messages to each other. Called the *Thoothu* genre, a rare and not very well-known *thoothu* written in the 16th or 17th century by Palapattai Chokkanatha Pillai is called the *Azhagar Kili Vidu Thoothu*. Here, a heroine asks a parrot to tell the deity, called Azhagar, enshrined in Thirumaliruncholai, of her love for him. This temple is close to Madurai and the Chithirai festival is an important one.

In this short work in Tamil, the heroine praises a parrot for all its qualities, tells it of her love, describes the beauty and fame of the temple and asks the parrot to go there and when no one is looking, discreetly, in Telugu (a language she assumes others will not know), tell the Lord of her love for him. To reiterate, she adds a few bribes that include promising the parrot, fresh betel leaves every day and a special *puja* just for him.

The text also describes in detail, the Chithirai festival in Madurai. Called the *Kodai* (Summer) *thiruvizha*, it happens in Thallakulam, where the deity is placed on a horse with gold and silver parasols, flags, drums and milling crowds that squirt cool water on each other for fun. It also mentions a *Kanikkai Kopparai*, presumably a pot for offerings from devotees leading the procession. The text concludes by saying the procession stops at several spots on the Vaigai riverbank and offerings are made to the deity of Azhagar on his Kudhirai Vahana. By sunset the Vandiyur *mandapam* is reached as the fire torches are lit and fireworks set off to the amusement of the milling crowds.

## கிளி வாகனம்

பெண் தெய்வங்களின் வாகனமான கிளி அநேகமாக சிவன் கோவில்களிலேயே காணப்படுகின்றன. ஏனென்றால், விஷ்ணு கோவில்களில் தாயார் தனியே கோவிலுக்கு வெளியே வலம் செல்வதில்லை. இலக்கியத்திலும் புராணங்களிலும் கிளி பரவலாக காமன் எனப்படும் மன்மதனின் வாகனமாக காமனுடன் தொடர்பு படுத்தியே கூறப்படுகிறது. நாயகி தன் காதல் நிறைவேறுமானால் காதல் தெய்வத்திற்கு ஒரு கிளி வாகனம் கொடை அளிப்பதாக பிரார்த்தனை செய்யும் ஒரு பாட்டை சீவகசிந்தாமணியில் [(2057) – சுரமஞ்சரியார் இலம்பகம்] காணலாம்.

காதலுடன் தொடர்புபடுத்தி இந்தப் பறவை கூறப்படுவதால், இலக்கியத்தில் காதலர்களிடையே தூது செல்வதற்கு ஏற்ற தூதுவனாக இது கருதப்படுகிறது. தூது என்னும் இலக்கிய நடையில் 16 அல்லது 17ம் நூற்றாண்டின் கவி பளப்பட்டை சொக்கநாத பிள்ளை எழுதிய அழகர் கிளிவிடு தூது பெயர் பெற்ற ஒரு நூலாகும். இதில் நாயகி தன் கிளியை திருமாலிருஞ்சோலை அழகரிடம் சென்று அவரிடம் தனக்கு உள்ள காதலை எடுத்துக் கூற வேண்டுகிறாள். மதுரையினருகே உள்ள அழகர் கோவிலில் நடக்கும் சித்திரை உற்சவம் மிக பிரசித்தி பெற்றது.

இந்தச் சிறிய தமிழ் நூலில், கிளியை அதன் நல்ல குணங்களிற்காக பாராட்டி தனக்கு அழகர் மீதுள்ள காதலைக் கூறுவதுடன், அந்த கோவிலின் அழகைப் பற்றியும் விவரித்து, ஒருவரும் பார்க்காமல் இருக்கும்போது மற்றவர்கள் புரிந்து கொள்ள முடியாத தெலுங்கு பாஷையில் தன் காதலை அழகரிடம் தெரிவிக்க வேண்டுகிறாள் நாயகி. தன் காரியம் கைகூட வேண்டி அவள் புதிய வெற்றிலைகளை அளிப்பது, தனிப்பட்ட பூசை ஒன்றை கிளிக்கு செய்வது போன்ற சில சலுகைகளை கிளிக்கு தினமும் அளிப்பதாக வாக்களிக்கிறாள்.

அந்த நூல் மதுரையில் நடக்கும் சித்திரை உற்சவத்தையும் விவரிக்கிறது. கோடைத் திருவிழா என அழைக்கப்படும் இத்திருவிழா, தல்லாகுளத்தில் அழகரின் மூர்த்தி குதிரை வாகனத்தின் மீது தங்கம் மற்றும் வெள்ளிக்குடைகள், கொடிகள், முரசுகள் சூழ கொலுவிருப்பதையும், மக்கள் கூட்டம் ஒருவர் மேல் ஒருவர் வண்ண நீர் பாய்ச்சி விளையாடுவதையும் விவரிக்கிறது. அதில் காணிக்கை கொப்பரை என்று ஊர்வலத்தின் முன் செல்லும் மக்கள் அளிக்கும் காணிக்கைகளுக்கான ஒரு குடத்தை பற்றிய குறிப்பையும் காணலாம். அந்நூல் இறுதியில், வைகை நதியின் கரையில் பல இடங்களில் நின்று அந்த ஊர்வலம் பக்தர்களின் வழிபாடுகளை குதிரை வாகனத்தின் மீதிலிருந்து அழகர் ஏற்பதாகக் கூறுகிறது. சூரியன் அஸ்தமிக்கும் வேளையில், வண்டியூர் மண்டபத்தை ஊர்வலம் அடைந்தவுடன், தீவட்டிகள் ஏற்றப்பட்டு, திரண்டு வந்திருக்கும் மக்களை மகிழ்ச்சியூட்டும் வகையில் வாண வேடிக்கைகள் சிறப்பாக நடைபெறுகின்றன.

## Moonjuru Vahana

*Moonjuru* (mouse) is the vahana of Ganesa, who is one of today's most popular Gods. Mentioned in the Vedic hymns, images of Ganesa date from the Pallava times. The famous Pillayarpatti temple is one of the rare Pandya period cave temples that dates from the 4th century. Avvaiyar (circa 2nd century BCE) mentions the *Mooshika* as a vahana of this God.

Ganesa is primarily worshipped as a remover of obstacles and his humungous form is in stark contrast to the mouse that bears him. He is found in all Shiva temples, as well as in temples dedicated to him.

The Ganesa temple at Thiruchengattukudi has an interesting inscription from the 16th year of the reign of Kulotunga III. It mentions that land was purchased that year to facilitate the procession of the deity on his mount, from the Sirutondar Devar mandapam in Thiruchengattukudi to Tirumarugal and back.

## மூஞ்சூறு வாகனம்

இன்று நம்மிடையே அதிகமாக வணங்கப்படும் கடவுள் கணேசரின், வாகனம் மூஞ்சூறு. வேதங்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் கணேசரின் உருவச்சிலைகளைப் பல்லவர் காலம் முதல் காணமுடிகிறது. 4ம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரபலமான பாண்டியர் காலத்து குகைக் கோவில் பிள்ளையார்பட்டியில் உள்ளது. ஔவையார் (கி.மு 2ம் நூற்றாண்டு) இந்தக் கடவுளின் வாகனமாக மூஷிகத்தைக் கூறுகிறார்.

இடர்களைக் களையும் தெய்வமாக வழிபடப்படும் கணேசர், அவரைத் தாங்கும் மூஞ்சூறுக்கு எதிர்மறையான பெரும் தோற்றம் கொண்டவர். அவருக்கான தனிக் கோவில்களில் மட்டுமல்லாமல் அனைத்து சிவன் கோவில்களிலும் இவரைக் காணலாம்.

மூன்றாம் குலோத்துங்கனின் **16ம்** வருட ஆட்சிக்காலத்தில் செதுக்கப்பட்ட ஒரு சுவாரஸ்யமான தகவல் திருசெங்காட்டுக்குடி கணேசர் கோவிலில் உள்ளது. குறிப்பிட்ட அந்த வருடம் அக்கோவில் மூர்த்தியை அவருடைய வாகனத்துடன் திருச்செங்காட்டுக் குடியில் உள்ள சிறுத்தொண்டர் தேவர் மண்டபத்திலிருந்து திருமருகல் வரை ஊர்வலமாகச் சென்று திரும்ப உதவும் வகையில் நிலம் வாங்கப்பட்டு கோவிலிற்கு கொடை அளிக்கப்பட்ட தகவல் அதில் இருக்கிறது.

## Yanai Vahana

The elephant is a favoured vahana in both Shiva and Vishnu temples. In Vishnu temples, it is used on the 6th day of the festival. In most vahanas, the elephant's trunk is split into 3 to 4 parts and attached together with a cloth that is painted over. This ensures that the trunk moves independently as the elephant is carried around the streets. The vahana in the Nanguneri Vishnu temple has a beautiful howdah or covered chair on the back for the idol to be seated inside. One of the grandest animals, it is an important vahana for its majesty, size and royal associations. In Vishnu temples, when the vahana is borne up, each of the front sides is lifted first and then the rear, just like how a seated elephant arises. The bearers of the vahana also walk like an elephant and this is known as *Chaai nadai* or the *yesal*. The bells on the elephant further add to the realism. In Shiva temples, it is the vahana for Muruga. His elephant is called Pinimukham.

The *Patitrupattu* has several references to valiant kings riding magnificent elephants that storm the gates of the enemy's forts. The bejewelled elephants have feet that are red with the blood of trampled soldiers and on either side they have bells that clang out aloud. They have a secretion oozing out from behind their ears that attract swarms of bees. The signal for battle was also given by a *tannumai* being beaten by a drummer from atop the elephant.

In the *Puranas,* the most famous elephant is Airavata, a white elephant that is the descendent of Vishnu and the vehicle of Indra. This is one of the 8 male and female elephants that support the earth by bearing it on their backs. They are named on the East (male—Airavata & female—Abhramu), South-east (Pundarika & Kapila), South (Vamana & Pingala), South-west (Kumuda & Anupama), West (Anjana & Tamrakarni), North-west (Puspadanta & Subhradanti), North (Sarvabhauma & Angina), North-east (Supratika & Anjanavati/Amarakosa).

Thirumangai Azhwar, in his verse on Vishnu, describes Vishnu himself as large and majestic, like the elephant.

## யானை வாகனம்

சிவன் மற்றும் விஷ்ணு – இரு கோவில்களிலுமே பிரபலமாக விளங்குவது யானை வாகனங்கள். விஷ்ணு கோவில்களில் இது 6ம் நாள் உற்சவத்தில் உபயோகிக்கப்படும். பல இடங்களில், யானை தும்பிக்கை 3 அல்லது 4 பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, வண்ணச் சித்திரங்கள் கொண்ட துணியால் இணைக்கப்பட்டிருக்கும். வீதி ஊர்வலங்களின் போது யானையின் தும்பிக்கை மட்டும் தனித்து ஆடுவதற்கு இது உதவுகிறது. நாங்குநேரி விஷ்ணு கோவிலில் யானை வாகனத்தின் மீது பெருமாள் அமர ஒரு அழகான பீடமும் உள்ளது. சிறப்பு வாய்ந்த மிருகங்களில் ஒன்றான யானை, அதன் கம்பீரம், பரிமாணம் மற்றும் அரசர்களுடனான தொடர்புகளால், மிகவும் மதிக்கப்படுகிறது. பெருமாள் கோவில்களில் இந்த வாகனத்தை எடுக்கும் போது முன்புறங்கள் இரண்டும் முதலில் தூக்கப்பட்டு, அதன் பின், பின்புறம் தூக்கப்படுவதால், அது உட்கார்ந்த நிலையில் உள்ள யானை எழும்புவது போன்ற தோற்றத்தை அளிக்கிறது. வாகனத் தூக்கிகள் யானைப் போல் நடக்கும் அந்நடைக்கு சாய் நடை அல்லது ஏசல் என்று பெயர். அவைகளின் கழுத்து மணிகள் ஒலிப்பது மேலும் நிஜ யானையின் தோற்றத்தை அளிக்கிறது. சிவன் கோவில்களில் இது முருகனுடைய வாகனம்; இது பிணிமுகமென்று அழைக்கப்படுகிறது.

பதிற்றுப்பத்தில், பல மன்னர்கள் கம்பீரமான யனைகள் மேல் வந்து எதிரிகளின் கோட்டைகளைத் தாக்கியதன் வர்ணனைகள் உள்ளன. அந்த அலங்கார யானைகளின் கால்கள், மிதிபட்டு இறக்கும் வீரர்களின் குருதியால் சிவந்து, கழுத்தின் இருபுறமும் தொங்கும் மணிகளின் பிளிரல்களுடன் வருகின்றன. அவைகளின் காதுகளின் பின்புறத்திலிருந்து சுரக்கும் மத நீர், வண்டுக் கூட்டங்களை கவர்கின்றன. யானைமேல் அமர்ந்து முரசு அடிப்பதுடன் போர் துவங்குகிறது போன்ற தகவல்கள் காணப்படுகின்றன.

விஷ்ணுவிடமிருந்து தோன்றி, பின் இந்திரனிற்கு வாகனமான ஐராவதம் என்ற வெள்ளை யானை, புராணங்களில் பிரபலமாக கூறப்படும் ஒன்று. இவ்வுலகைத் தாங்கும் எட்டு யானைகளில் இதுவும் ஒன்று. கிழக்கில் (ஆண் யானை) ஐராவதம்; (பெண் யானை) அப்ரமு; தென்கிழக்கில் புண்டரீகனும் கபிலனும்; தெற்கில் வாமனனும் பிங்களமும்; தென்மேற்கில் குமுதா, அனுபமா; மேற்கில் அஞ்சனா, தாம்ரகர்ணி; வடமேற்கில் புஷ்பதந்தா, சுப்ரதந்தி; வடக்கில் ஸர்வபௌமா, அங்கினா; வடகிழக்கில் ஸூப்ரதிகா, அஞ்சனாவதி அல்லது அமரகோசா என்ற யானைகள் இருப்பதாக புராணங்கள் கூறுகின்றன.

திருமங்கை ஆழ்வார் தன் பாசுரத்தில் எம்பெருமானையே மிகப் பெரிய கம்பீரமான யானைக்கு ஒப்பிடுகிறார்.

## Aadu Vahana

The goat is the vahana of Muruga. The *Skanda Purana* says that he used this vahana, before he took the peacock as his primary vahana. Although the goat represented Muruga's vahana, the live animal was still sacrificed to Muruga. In the *Tirumurugaratrupadai*, Canto 6, lines 1 and 2, we hear that, grains and flowers were mixed and offered, along with a goat that was sacrificed. As the flag with the peacock was raised for the lord . . .

The *Kandhar Kalivenba* was authored by Kumaraguruparar in the 17th century. He says,

*My lord was born from the flames of the red eye*
*Bring the Goat here, he said to Veerabahu*
*When it was brought, he rode it to victory in the eight directions*
*And plays with this world.*

A 14th century Jain work on grammar, the *Nannool*, authored by Bavanandi Muni, divides students into three types. The first and superior type is compared to a *hamsa* and a cow. The second type is compared to clay and a parrot. The third and most inferior type is compared to a goat (that is always straying and is superficial and never goes deep into the subject), a buffalo (that learns after taxing the teacher a great deal), a sieve (that retains the bad and lets go the best) and a broken pot (that lets go good and bad). Given these qualities of denseness and lack of intelligence, Muruga, the wise one who taught his father the most sacred mantra, uses the goat as his vehicle and symbolically quells ignorance.

In the period from 9th to 13th centuries, the gift of goats, usually 96 in number, was a popular one for temples. The ghee from their milk was used to light lamps in the temple.

In Muruga temples, the goat is an important vahana and the episode of Muruga killing the *asura* Surapadma is enacted while the deity of Muruga is seated on a goat vahana. Once the asura is killed, the goat vahana is transformed into a peacock.

## ஆடு வாகனம்

ஆடு முருகனின் வாகனம். மயிலை தன் முக்கிய வாகனமாக கொள்ளும் முன்பு முருகன் ஆட்டை வாகனமாகக் கொண்டிருந்ததாக ஸ்கந்த புராணம் கூறுகிறது. இது முருகனின் வாகனமாக இருந்தும் கூட ஆடு அவருக்கு படையலாகவும் அளிக்கப்பட்டது. திருமுருகாற்றுப்படை ஆறாம் பாகம் 1 மற்றும் 2வது வரிகளில், மயில் கொடி ஏற்றப்பட்டவுடன், பலி ஆட்டினுடன் தானியங்களும் பூக்களும் கலந்து படைக்கப்பட்டன.

17ம் நூற்றாண்டில் குமரகுருபரர் இயற்றிய கந்தர் கலிவெண்பாவில் அவர் சொல்கிறார்:

*மங்கை சிலம்பின் மணிஒன் பதில்தோன்றும்*
*துங்க மடவார் துயர்தீர்த்து – தங்கள்*
*விருப்பால் அளித்தநவ வீரருக்குள் முன்னோன்*
*மருப்பாயுந் தார்வீரவாகு–நெருப்பிலுதித்(து)*
*அங்கட் புவனம் அனைத்தும் அழித்துலவும்*
*செங்கட் கிடாயதனைச் சென்று கொணர்ந்(து) – எங்கோன்*
*விடுக்குதி என்(று) உய்ப்ப அதன் மீதமர்ந்(து) எண்டிக்கும்*
*நடத்தி விளையாடு நாதா!*

நன்னூல் என்னும் ஜைனர்களின் படைப்பான 14ம் நூற்றாண்டு இலக்கண நூலில், பவநந்தி முனிவர் மாணவர்களை மூன்று வகைப்படுத்துகிறார். அதில் முதலாம் நிலையில் இருக்கும் மாணவன் அன்னப் பட்சி அல்லது பசு. இரண்டாம் நிலையில் உள்ளவர்கள் களிமண் மற்றும் கிளி; மூன்றாம் அல்லது கடை நிலையில் உள்ள மாணவன், ஆடு (அங்கும் இங்கும் மேய்ந்து கொண்டு ஆழமான படிப்பைத் தவிர்ப்பவன்), எருமை (ஆசிரியருக்கு மிகுந்த சிரமத்தைக் கொடுத்த பின் படிப்பவன்) அல்லது சல்லடை (நல்லதை விடுத்து தீமையை மட்டுமே ஏற்பவன்), மற்றும் உடைந்த பானை (நல்லது மற்றும் தீயது இரண்டையும் விடுப்பவன்) தந்தைக்கே மந்திரோபதேசம் செய்த முருகன், மதியின்மையையும் புத்திசாலித்தனமும் இல்லாத மனிதர்களின் உய்விற்காக, அஞ்ஞானத்தை அழிக்கும் குறியீடாக ஆட்டை வாகனமாகக் கொள்கிறார்.

9 முதல் 13ம் நூற்றாண்டுகளில், கோவில்களுக்கு ஆடுகளை–96 ஆடுகள்– நன்கொடை அளிப்பது பழக்கத்தில் இருந்து வந்தது. அந்த ஆடுகளின் பாலிலிருந்து எடுத்த நெய்யை கோவில்களில் விளக்குகளை ஏற்ற உபயோகித்தார்கள்.

முருகன் கோவில்களில், ஆடு ஒரு முக்கிய வாகனமாகும்; சூரபத்மனை வதைக்கும் காட்சிகளில் முருகன் ஆடு வாகனத்தின் மீது அமர்ந்தே காட்சி அளிக்கிறார். அசுரனை அழித்தவுடன் ஆடு வாகனம் மயில் வாகனமாக மாறிவிடுகிறது.

## Puli Vahana

This vahana is for Shasta, a powerful village God, and is also identified with Ayyappan, another son of Shiva and Parvati. Unusually, this vahana is also found in the Chennai Kapaleeswara temple. The tiger signifies bravery, ferociousness and agility and is therefore the vahana of Ayyappan. The Shasta temple in Vettumani (near Kanyakumari) has a famous Puli Vahana.

Ayyanar (known as Shasta in the Tamil-speaking lands close to Kerala) is also known as Parimelazhagar—the beautiful one who rides a horse or as Karimelazhagar—the beautiful one who rides an elephant and as Arimelazhagar—the beautiful one who rides a tiger.

In ancient literature, there are more references to the tiger than the lion. The tiger was also the symbol of the Chola kings. The duels between an elephant and tiger are a popular subject for poets. Kapilar, in his verse in the *Kalithokai* says,

*After a bitter battle with a tiger,*
*the elephant rested for a while*
*Upon waking up he saw the Venkai tree ablaze with flowers*
*Mistaking this for another tiger, the elephant uprooted the tree*
*And then realised its folly*
*Now, every time the brave elephant sees this tree, it turns coy and bashful!*

(Verse 49)

## புலி வாகனம்

இது கிராமப்புறங்களில் வழிபடப்படும் சக்தி வாய்ந்த சாஸ்தாவின் வாகனமாகும். சிவனிற்கும் பார்வதிக்கும் பிறந்த மற்றொரு மகனான ஐயப்பன் தான் சாஸ்தாவெனக் கூறப்படுகிறார். அபூர்வமாக இந்த வாகனம் சென்னையின் கபாலீசுவரர் கோவிலிலும் காணப்படுகின்றது. புலி தைரியம், உக்கிரம், வேகம் ஆகியவற்றைக் குறிப்பதால், ஐயப்பனின் வாகனமாகக் கருதப்படுகின்றது. கன்யாகுமரிக்கு அருகே உள்ள வெட்டுமனி சாஸ்தா கோவிலில் உள்ள புலி வாகனம் பிரபலமான ஒன்று.

சாஸ்தா என்று கேரளாவின் எல்லையிலுள்ள தமிழ் பேசும் இடங்களிலுள்ள மக்களால் அழைக்கப்படும் அய்யனாருக்கு, குதிரையில் பவனி வரும் அழகர்—பரிமேலழகர் என்றும் யானை மீது உலாவரும் அழகர்—கரிமேலழகர் மற்றும் புலியின் மேல் வரும் அழகர் அரிமேலழகர் என்ற பெயர்களும் உண்டு.

பழந்தமிழ் இலக்கியத்தில், சிங்கத்தை விட அதிக குறிப்புகள் புலிகளை பற்றியனவாக உள்ளன. சோழ அரசர்களின் சின்னமாகவும் புலி இருந்தது. பல கவிகளுக்கு யானைக்கும் புலிக்கும் இடையே நடக்கும் சண்டை பாடும் பொருளாக இருந்தது. கலித்தொகையில் கபிலர் பாடுகிறார்:

*கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு*
*நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை*
*நனவில் தான்செய்தது மனத்தது ஆகலின்*
*கனவில் கண்டு, கதுமென வெரீஇ*
*புதுவதாக மலர்ந்த வேங்கையை*
*அதுவென உணர்ந்து, அதனணிநலம் முருக்கி*
*பேணா முன்பின் தன்சினம் தணிந்து, அம்மரம்*
*காணும் பொழுதின் நோக்கல் செல்லாது*
*நாணி இறைஞ்சும் நல்மலை நல்நாட*
*போது எழில்மலர் உண்கண் இவள்மாட்டு நீ இன்ன*
*காதலை என்பதோ இனிது மற்று இன்னாதே...*

(செய்யுள் 49)

## Kudhirai Vahana

The vahana of a horse is common in both Vishnu and Shiva temples. In Vishnu temples, they usually appear after the 5th or 6th day of the festival. The most famous of them is that of Azhagar, the processional deity of Thirumaliruncholai, mounted on his horse, who comes to attend his sister, Goddess Meenakshi's wedding at Madurai, but goes back without completely crossing the Vaigai river. This festival happens in the Tamil month of Chithirai (mid-April to mid-May) on a full moon day. On this occasion and when the vahana is used in Srirangam, the bearers break into a run to give the impression of a galloping horse. This is called the *kona oyyali*.

Horses find mention in the oldest Tamil works and were respected for their use in military battles. Their gallop is said to resemble the movement of the bamboo springing back to position and like their heroic riders, the horses defeated in battle do not return home. Horses were also named after their royal owners, as seen in the *Perumbanatrupadai*.

In the *Puranas*, there are several references to horses. They were, like camels, according to the *Agni Purana*, created by Tamra and Kashyapa (who was Brahma's grandson). They are important symbols of the King and a king, to establish universal sovereignty, conducted the *Asvamedha* or horse sacrifice. A white horse accompanied by at least a 100 warriors was let loose and any king who sought to question the authority of the king, who owned the horse, did so by preventing the horse from entering his territory. If he challenged the horse, he would have to fight the warriors. Kings who completed a 100 of this *yaga* were said to be equal to Indra himself.

Vishnu, with the head of a horse is known as Hayagriva. Hayagriva, in the *Devi Mahatmiyam* (*Prathama Skanda*) is also the name of an asura who had the neck of a horse and was vanquished by Vishnu. This also contains the story of how termites were created by Brahma and how they woke Vishnu by eating the bow on which he was sleeping and resting. Consequently termites get a portion of any offering to Brahma in a *yaga*.

## குதிரை வாகனம்

குதிரை வாகனம் சிவன் மற்றும் விஷ்ணு கோவில்களில் பொதுவாகக் காணப்படுபவை. அவை வழக்கமாக 5வது அல்லது 6வது உற்சவ நாளுக்குப் பிறகு பவனி வரும். அழகர் கோவில் குதிரை வாகனம் அவைகளுள் மிகப் பிரபலமானது. திருமாலிருஞ்சோலையின் அதிபதியான அவர், தன் சகோதரி மீனாக்ஷியின் திருமணத்திற்கு வந்து, திரும்பும் போது வைகை ஆற்றை முழுவதும் கடக்காமல் திரும்பிவிடுகிறார். இந்த உற்சவம் சித்திரை மாதப் பௌர்ணமியன்று நிகழ்கிறது. இந்த உற்சவத்திலும், ஸ்ரீரங்கத்தில் இந்த வாகனத்தை சுமப்பவர்கள் குதிரை ஓடுவதைப் போன்று தோற்றம் அளிக்க தாமும் ஓடுவர். இதற்கு கோண ஒய்யாளி என்று பெயர்.

பழைய தமிழ் நூல்களிலும் போரில் குதிரைகள் உபயோகப்படுத்தப்பட்டது பற்றிய விவரங்கள், சிறப்பாகக் காணப்படுகின்றன. ஒரு மூங்கில் வளைந்து நிமிருவதை ஒத்திருப்பதாக அவைகளின் ஓட்டம் கூறப்படுகிறது. அதன் மீதேறி போரிடும் வீரர்களைப் போலவே அக்குதிரைகளும் தோற்றால் நாடு திரும்புவதில்லை. பெரும்பானாற்றுப்படையில் குதிரைகளும் அவைகளின் சொந்தக்காரர்களின் பெயர்களைத் தாங்குவதைக் காணலாம்.

புராணங்களில் குதிரைகளைப் பற்றிய பல குறிப்புகள் உள்ளன. பிரம்மாவின் பேரனான கச்யபர் மற்றும் தம்ராவால், ஒட்டகங்களைப் போல குதிரைகளும் தோற்றுவிக்கப்பட்டதாக அக்னி புராணம் கூறுகிறது. குதிரைகள் ஒரு மன்னனின் முக்கிய குறியீடாக இருந்ததால், அவன், நாடுகள் அனைத்தும் தன் ஆட்சிக்குட்பட வேண்டுமென்பதற்காக அச்வமேத யாகம் நடத்தினான். நூறு வீரர்களுடன் ஒரு வெள்ளைக் குதிரை நாடுகள் தோறும் செல்ல சுதந்திரமாக விடப்படும். தன் எல்லைக்குள் அக்குதிரையை வராமல் தடுத்து, குதிரையின் உரிமையாளனான மன்னனை எதிற்கும் எந்த சிற்றரசனும், அந்த வீரர்களுடன் போர் செய்ய நேரிடும். இவ்வாறு பல அரசர்களையும் வென்று வெற்றிவாகை சூடி வரும் குதிரை. இம்மாதிரி நூறு அச்வமேதங்கள் செய்த மன்னன் இந்திரனுக்கு சமானமாகக் கருதப்படுவான்.

குதிரைமுகம் கொண்ட விஷ்ணுவின் உருவத்திற்கு ஹயக்ரீவர் என்று பெயர். தேவி மஹாத்மியம், முதலாம் ஸ்கந்தத்தில் விஷ்ணு அழித்த குதிரைமுகம் கொண்ட ஒரு அசுரனும் ஹயக்ரீவனென்று அழைக்கப்பட்டான். கரையான்கள் பிரம்மாவினால் உண்டாக்கப்பட்டு, அவை விஷ்ணு படுத்திருந்த வில்லை அரித்து, விஷ்ணுவை தூக்கத்திலிருந்து எழுப்பியதையும், அதனால் பிரம்மாவிற்கு செய்யப்படும் அனைத்து யாகங்களிலும் நிவேதனங்களில் செல்லுகளுக்கும் ஒரு பங்கு உண்டென்பதையும் ஒரு புராணக் கதை கூறுகிறது.

## Yali Vahana

The *yali* is a ferocious mythical beast that has very few literary references but is amongst the most popular motifs in decorative art. The prancing yali is popular in pillars, especially from the Vijayanagar period. It used to be a popular motif in jewellery, especially pendants and in textiles. Yali motifs were also popular in woodcarving and etched in metal ware.

The yali is seen with the face of a lion or a combination of a lion with the trunk of an elephant. In vahanas, the yali is always prancing and its trunk is intertwined with that of a seated elephant. This also indicates the relative size of this mythical beast.

The Yali Vahana is common to both Vishnu and Shiva temples. It is however found more regularly in Vishnu temples. A fine example of this vahana can be found at Srirangam.

## யாளி வாகனம்

இலக்கியத்தில் மிகக் குறைவான குறிப்புக்களே கொண்டிருந்தாலும், நம் கைவினைக் கலைகளில் வெகுவாகச் சித்தரிக்கப்பட்டும் புராணங்களில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு மூர்க்கமான மிருகம் யாளி. தூண்களில்–முக்கியமாக விஜயநகர் காலத்தவை–குதித்தோடும் யாளிகளைக் காணலாம். அது ஆபரணங்களிலும், முக்கியமாக பதக்கங்களிலும் மற்றும் ஆடைகளிலும் பிரபலமாகக் காணப்படுகிறது. யாளிச் சின்னம், செதுக்கப்பட்ட மரம் மற்றும் உலோக கைவினைப் பொருள்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

யாளி சிங்க முகம் அல்லது சிங்கம் மற்றும் யானையின் தும்பிக்கையுடனும் காணப்படும். வாகனங்களில், யாளி அநேகமாக குதிக்கும் நிலையிலும் தும்பிக்கை ஒரு உட்கார்ந்த நிலையில் உள்ள யானையுடன் பிணைந்தும் காணப்படுகிறது. இந்த புராண மிருகத்தின் பெரிய உருவத்தைக் குறிப்பிடுவதற்காக இப்படி உருவகப்படுத்தியிருக்கலாம்.

யாளி வாகனம் சிவன் மற்றும் விஷ்ணு என இரு கோவில்களிலும் காணப்பட்டாலும், விஷ்ணு கோவில்களில் அதிகமாக வழக்கத்தில் இருக்கிறது. இந்த வாகனத்திற்கு ஒரு சிறப்பான எடுத்துக்காட்டு ஸ்ரீரங்கம் கோவிலில் காணப்படும் யாளி.

## Simha Vahana

Despite its majestic appearance and position as the king of beasts, there are relatively few references to the lion in ancient Tamil literature. However as a motif, it is widely present. One of the earliest representations is in the Pallava dynasty, when a seated lion was a typical base for a pillar.

*Andal, in her* Tirupavai *in verse 23 refers to Vishnu being like the lion:*

*Lord with the dark eyes, like the Kaya flower,*
*Arise from your sleep to bless us!*
*Be like the fierce lion that sleeps in a cavern in the mountain.*
*Awake, show us your fiery eyes and shake your glorious mane,*
*Like a lion that yawns, stretches its back before arising, step out,*
*Ascend your lion-throne, and ask us what we want!*

The Simha Vahana is common to both Vishnu and Shiva temples. In most cases, it is frequently found, with the two front legs preparing to pounce and the rear ones on the ground. The mouth is open showing sharp teeth and tongue. To maintain balance, most Simha Vahanas have a seated man/demon that supports the lion. The Varadaraja temple in Kanchipuram has a fabulous vahana plated with gold. The Kalikamba temple in Chennai has a rare Simha Vahana that has two faces.

The lion, in Shiva temples is usually the vahana of the goddess. Parvati, as Durga, was seated on a lion when she fought and vanquished the asura, Mahisha. A grand bas-relief of this event can be seen in Mahabalipuram.

## சிம்ம வாகனம்

கம்பீரமான தோற்றம் கொண்ட சிங்கம் மிருகங்களின் அரசன் என்றெல்லாம் புகழ் பெற்றிருந்தாலும், அதைப் பற்றிய வெகு சில குறிப்புக்களே பழந்தமிழ் இலக்கியத்தில் காணக் கிடைக்கின்றன. ஆனாலும் ஒரு கலைச் சின்னமாக அது பரவலாக உபயோகத்தில் உள்ளது. பல்லவர் குலச் சின்னங்களில், உட்கார்ந்த நிலையில் உள்ள சிங்கம் தூண்களைத் தாங்குவதாக உருவாக்கப்பட்டிருப்பதுதான், அது முதன் முதலாக சின்னமாக உபயோகப்படுத்தப்பட்டதை நமக்கு அறிவிக்கிறது.

ஆண்டாள் திருப்பாவையின் 23வது பாசுரத்தில் விஷ்ணுவை சிம்மத்துடன் ஒப்பிட்டு பாடுகிறாள்.

*மாரி மலை முழைஞ்சில் மன்னி(க்) கிடந்து உறங்கும்*
*சீரி ய சிங்கம் அறிவுற்று(த்) தீ விழித்து,*
*வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி*
*மூரி நிமிர்ந்து முழங்கி(ப்) புறப்பட்டு(ப்)*
*போதருமா போலே நீ பூவைப்பூ வண்ணா உன்*
*கோயில் நின்று இங்ஙனே போந்தருளி(க்) கோப்புடைய*
*சீரிய சிங்காசனத்து இருந்து யாம் வந்த*
*காரியம் ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய்.*

சிம்ம வாகனம் சிவன், விஷ்ணு என இரு கோவில்களிலும் காணப்படுகின்றன. முன் கால்களைத் தூக்கியும், பின் கால்கள் தரையில் பதித்தும், பாயும் நிலையில் அது, பரவலாக காணக்கிடைக்கிறது. அதன் வாய் திறந்து, கூர்மையான பற்களும் நாக்கும் வெளியில் தெரியுமாறு அமைக்கப்பட்டிருக்கும். அதன் எடையைத் தாங்கும் வகையில், பல சிம்ம வாகனங்களிலும், அதன் கீழே ஒரு மனித அல்லது அசுர உருவம் உட்கார்ந்திருப்பதைக் காணலாம். தங்கக் கவசம் அணிந்த ஒரு அற்புதமான சிம்ம வாகனம் காஞ்சி வரதராஜர் கோவிலில் உள்ளது. சென்னையின் காளிகாம்பாள் கோவிலில் அபூர்வமான இரண்டு முகங்கள் கொண்ட சிம்ம வாகனம் இருக்கிறது.

சிவன் கோவில்களில் சிம்ம வாகனம் அநேகமாக தேவியின் ஊர்வலங்களில் உபயோகப்படுத்தப்படுகிறது. மகிஷாசுரனைக் கொன்ற போது பார்வதி துர்க்கையென்ற பெயரில் சிம்மத்தின் மேல் அமர்ந்திருந்தாள். மஹாபலிபுரத்தில் இந்த நிகழ்வை சித்தரிக்கும் ஒரு அழகான புதை சித்திரத்தைக் காணலாம்.

## Maan Vahana

This vahana made of wood and plated with silver is found in the Thanjavur Brihadeeswara temple. The blackbuck, called *Iralai maan* in Tamil, is different from the deer, because unlike the deer, the antelope has long straight horns that are never shed.

References in the *Silapadikaram* allude to this animal being the vahana for Kotravai, the frightful form of Parvati.

An inscription in silver states that during the reign of Kamakshiamba Boyi Sahib, Sri Prathap Veera Hanuman and Nagaraja Ramoji Pandit, this vahana meant for the lord, was repaired and before December 29th, 1803, was used in the temple festival. Each leg was coated with silver plates weighing 8 *sher*, and the whole vahana was plated with 88 *sher*. One *sher* is approximately 280 *grammes*.

Shiva also holds a *mriga* or deer in his rear hand. In the Pallava and early Chola sculptures, the deer is prancing and faces inwards but as the times progressed, in later Chola and Vijayanagar times, the idol makers chose to show it prancing outwards.

## மான் வாகனம்

மரத்தால் செய்யப்பட்டு, வெள்ளித் தகடு வேயப்பட்டுள்ள இந்த வாகனம் தஞ்சாவூர் பிருஹதீசுவரர் கோவிலில் காணப்படும். இறலை மான் என்றழைக்கப்படும் இந்த கருத்த மான் சாதாரண மான்களிலிருந்து வேறுபட்டது. மற்ற மான்களைப் போல் அல்லாது, இவைகளின் நீண்டு நிமிர்ந்த கொம்புகள் விழுந்து முளைப்பதில்லை.

பார்வதியின் உக்கிர உருவமான கொற்றவையின் வாகனமாக இது பற்றிய குறிப்புக்கள் சிலப்பதிகாரத்தில் உள்ளது.

காமாக்ஷியம்பா போயி சாஹப், ஸ்ரீ பிரதாப வீர ஹனுமான், மற்றும் நாகராஜ் ராமோஜி பண்டிதர் ஆட்சிக் காலங்களில், சிவபெருமானிற்கான இந்த வாகனம் சீர்ப்படுத்தப்பட்டு, 1803ம் ஆண்டு டிசம்பர் மாதம் 29ம் தேதிக்கு முன் கோவில் உற்சவத்தில் உபயோகப்படுத்தப்பட்ட தகவலை, வெள்ளியில் செதுக்கப்பட்ட ஒரு குறிப்பு தெரிவிக்கிறது. ஒவ்வொரு காலும் 8 சேர்கள் வெள்ளி கொண்டும் முழு வாகனமும் 88 சேர்கள் தகட்டினாலும் மூடப்பட்டிருந்தது. (ஒரு சேர், சுமார் 280 கிராமிற்கு ஈடு ஆகும்).

சிவன் பின் கையில் ஒரு மானை ஏந்தியுள்ளார். பல்லவர் மற்றும் சோழர் கால ஆரம்ப வருடங்களில், இது துள்ளும் மானாக உள்பக்கம் நோக்கி இருப்பது போல் அமைக்கப்பட்டிருந்தது. ஆனால், பின்னால் வந்த சோழர்கள் மற்றும், விஜயநகர ஆட்சிக்காலத்தில், சிற்பிகள் இந்தத் துள்ளும் மானை, வெளிப்பக்கம் நோக்கி இருப்பதைப் போல் உருவாக்கத் துவங்கினார்கள்.

## Padma Vahana

This vahana is found in Shiva and Vishnu temples and is always used for the goddess.

The lotus rises tall from mud and slush and blooms into a fragrant and beautiful flower. The symbolism and its appearance make it a popular flower in mythology. Brahma is born in a lotus; both Lakshmi and Sarasvati are seated in it. The poetess-saint Andal refers to the closing water lily and the blooming lotus to signalling of a new day.

The fragrance, the softness and the shape of the petals are all likened to women or the shape of the eyes. This vahana is not a common one but can be found in both Vishnu and Shiva (for the goddess) temples.

Nammazhwar while singing of Tirumohur refers specifically to the pond of lotuses. Tirumangai Azhwar while singing of Mahabalipuram, also refers to their abundance. A popular name for Lakshmi is Padmavati, or one who is seated in a lotus.

There are several literary references to the lotus. This 4-line Tamil verse is from an undated manuscript in the U. Ve. Saminatha Iyer Library in Chennai. The verse is attributed to Kala Megha Pulavar, who lived in the 12th or 13th century. It puns on words and in splitting the words differently, the verse could be referring to a lotus or a mirror. If the intent is to read the verse with reference to a lotus, the lines go,

*Filled with honey, and found amidst water*
*Found among large leaves, this is the greatest among flowers.*
*This verse on the lotus and mirror is for Sendhan of Kunrathur.*
With reference to a mirror:
*Polished with rasam in the reverse, it is cut to any size needed*
*It's expensive to buy and very few in this world possess it*
*This verse on the lotus and mirror is for Sendhan of Kunrathur.*

The keywords include *iratham* or honey or *rasam*, the mercury that is used to make a mirror. *Paani* could mean both water and size; *maavilayai* can mean both big leaves and a great price.

## பத்ம வாகனம்

இந்த வாகனம் சிவன், விஷ்ணு இரு கடவுள்களின் கோவில்களிலும் எப்போதும் தேவி புறப்பாட்டில் உபயோகப்படுத்தப்படுகிறது.

தாமரை தன் சுற்றிலும் உள்ள சேற்றிலிருந்து உயர்ந்து எழுந்து, ஒரு மணமும் அழகும் கொண்ட மலராகத் தோன்றுகிறது. அதன் குறியீடும், தோற்றமும் அதை புராணங்களில் ஒரு முக்கிய மலராக சிறப்பாகக் குறிப்பிடுகிறது. பிரம்மன் தாமரை மலரில் தோன்றியவர்; லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் அதன் மேல் வீற்றிருப்பவர்கள். ஆண்டாள் தம் பாசுரம் ஒன்றில் அல்லி மலர் கூம்பி தாமரை மலர்வதைக் கூறி பொழுது புலரும் சித்திரம் தீட்டுகிறார்.

அதன் மணம், மென்மை, தோற்றம் என அனைத்துமே பெண்களுக்கோ அல்லது கண்களுக்கோ உவமையாகக் கூறப்படுகின்றன. இது பொதுவாக பல கோவில்களிலும் காணப்படாவிட்டாலும் சிவன் மற்றும் விஷ்ணு என இரு கோவில்களிலுமே சில இடங்களில் தேவியின் வாகனமாக இருக்கிறது.

திருமோகூரைப் பற்றிப் பாடும் நம்மாழ்வார் தாமரைகள் நிறைந்த குளத்தை அவ்விடத்துச் சிறப்பாகக் கூறுகிறார். மஹாபலிபுரத்தை பற்றிய திருமங்கை ஆழ்வாரின் பாசுரத்திலும் இது போன்று, அம்மலர்கள் அதிக எண்ணிக்கையில் இருப்பதைக் கூறுகிறார். தாமரையில் அமர்ந்திருக்கும் லக்ஷ்மியின் ஒரு பிரபலமான பெயர் பத்மாவதி.

தாமரையை பற்றி தமிழ் இலக்கியத்தில் பல குறிப்புக்கள் உள்ளன. சென்னை உ.வே. சுவாமிநாத அய்யர் நூலகத்தில் தேதி குறிப்பிடாத ஒரு நான்கு வரி செய்யுள் இருக்கிறது. 12ம் அல்லது 13ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த காளமேகப்புலவர் இயற்றியதாக இது கூறப்படுகிறது. இரு பொருள் கொண்டு அமைக்கப்பட்டுள்ள இச்செய்யுள், வார்த்தைகளை ஒரு விதமாகப் பிரித்தால் தாமரையையும், மற்றொரு விதமாகப் பிரித்தால் கண்ணாடியையும் குறிப்பிடுவதாக இரண்டு பொருள்பட அமைந்திருக்கிறது.

*பாவிரதஞ் சேருகையாற் பாணியிலே யுற்றிடலால்*
*மாவிலையை சேருகின்ற மாட்சியால் – பூவிலுயர்*
*சேமமிகுங் குன்றை நகர்ச் சேந்தன்வளர் தன்னில் மணத்*
*தாமரையே தரப் பணம் தாம்.*

தாமரையையும் கண்ணாடியையும் பற்றிய இச்செய்யுள் குன்றத்தூர் சேந்தனுக்காக இயற்றப்பட்டது.

முக்கியமான வார்த்தைகள்: “இரதம்” (அமிர்தம்) அல்லது தேன், அல்லது ரசம் – கண்ணாடி செய்ய உபயோகிக்கப்படும் பாதரசம். “பாணி” என்றால் நீர் அல்லது அளவு; மாவிலை என்பது பெரிய இலைகள் அல்லது உயர்ந்த விலை.

## Tirupuli Azhwar Vahana

This is a vahana of the tamarind tree and is found only in the Azhwar Tirunagari temple for Vishnu as Adinatha. The vahana is used for Saint Nammazhwar, who is associated with a tamarind tree that is still present within the temple precincts.

The most important Tamil text for Tamil-speaking Vaishnavites is the 4,000-verse *Divya Prabhandam*. These verses are composed by 12 saints who sang in praise of Vishnu and are known as the Azhwars. Azhwars can mean those who rule (through their devotion to God) or those immersed (in the love of God). The verses are revered by Vaishnavites and continue to be recited in temples. They are known as the Tamil Vedas. The word 'Azhwar' refers to their immersion in the love of Vishnu and their influence on the people because of their compositions on Vishnu. Among them, an important Azhwar is Nammazhwar.

Nammazhwar, from his birth, meditated under a tamarind tree in the Azhwar Tirunagari temple. It was under the tree that Madhurakavi, another Azhwar found him. All the former's verses were composed under the branches of the tree that can still be seen in the temple.

During the Vaikasi festival, Nammazhwar's processional deity is seated under a gold-plated wooden image of the tree. The tree is so revered that it is called the Tirupuli Azhwar.

## திருப்புளி ஆழ்வார் வாகனம்

ஆதிநாதராக விஷ்ணு கொலுவிருக்கும் ஆழ்வார் திருநகரி கோவிலில் மட்டுமே காணப்படும் வாகனம் இந்தப் புளிய மர வாகனம். கோவில் உள்ளே இருக்கும் நம்மாழ்வாருடன் தொடர்பு கொண்ட புளிய மரம் நம்மாழ்வாருக்கு மட்டுமே வாகனமாகக் கொள்ளப்படுகிறது.

தமிழ் பேசும் வைணவர்களின் முக்கியமான நூலாகக் கருதப்படுவது நாலாயிர திவ்வியப் பிரபந்தம். ஆழ்வார்கள் என்று அழைக்கப்பட்ட 12 விஷ்ணு பக்தர்களால் இயற்றப்பட்ட பாசுரங்களைக் கொண்டது இந்த நூல். இறைவனை ஆண்டவர்கள் அல்லது இறையில் ஆழ்ந்தவர்கள் என்ற பொருளில் இவர்கள் ஆழ்வார்கள் என அழைக்கப் பெற்றனர். தமிழ் வேதம் என்ற புகழுடன், இவர்களின் பாடல்கள் வைணவக் கோவில்களில் இன்றும் பக்தியுடன் ஓதப்படுகின்றன. விஷ்ணு பக்தியில் தம்மை ஆழ்ந்து ஈடுபடுத்திக்கொண்ட இவர்களின் தாக்கம் மக்களின்பால் பெரிதும் காணப்படுகிறது. ஆழ்வார்களில் நம்மாழ்வார் முக்கியமானவர்.

பிறந்ததிலிருந்தே நம்மாழ்வார் ஆழ்வார் திருநகரிக் கோவிலில் இருந்த புளிய மரத்தடியில் தியானம் செய்தவர். இந்த மரத்தடியில்தான் மதுரகவி என்ற மற்றொரு ஆழ்வார் நம்மாழ்வாரை சந்தித்தார். இன்றும் காணப்படும் அம்மரத்தின் கிளைகளின் கீழ்தான் நம்மாழ்வாரின் அனைத்து பாசுரங்களும் இயற்றப்பட்டன.

வைகாசி உற்சவத்தில், நம்மாழ்வாரின் உற்சவமூர்த்தி மரத்தாலான தங்க முலாம் பூசப்பட்ட புளிய மர உருவத்தினடியில் வைக்கப்பட்டு ஊர்வலமாகக் கொண்டு செல்லப்படுகிறது. அம்மரமும் புனிதமாகக் கருதப்பட்டு மரியாதையுடன் திருப்புளி ஆழ்வார் என்றே அழைக்கப்படுகிறது.

## Kalpa Vriksha Vahana

The Kalpa Vriksha is a divine tree that grants wishes. It is a popular vahana in Shiva temples and is found occasionally in Vishnu temples.

In the festival during the Panguni month in the Kapaleeswara temple, on the first night, the goddess is in the Kalpa Vriksha Vahana, the god in the Punnai Tree Vahana and Subramanya with his two consorts in the Vengai Tree Vahana.

Vahanas of this tree are of two types. One is a representation of a tree with many branches that have leaves, but real leaves are added as a decoration. The other type is when the tree is shown like a banana tree with a tall single trunk and leaves protruding from the trunk at the top.

Ancient myths do not give us much information about the appearance of this tree. They do mention it as a tree in the heavens and mention five trees of the same name, Mandara, Parijatha, Santana, Harichandana and Kalpa Vriksha. Some accounts state that the tree was one of the miraculous objects that emerged when the milky ocean was churned by the demons and the Gods. Incidentally, Shiva's garden in Kailasa is known as Kalpaka.

Thirumangai Azhwar mentions this tree when he describes Badri, the abode of Vishnu in the Himalayas.

## கல்ப விருக்ஷ வாகனம்

வேண்டும் வரங்களை எல்லாம் அளிக்கும் மரம் கல்ப விருக்ஷம் என்ற மரம். சிவன் கோவில்களில் இது ஒரு பிரபலமான வாகனம் எனினும், சில விஷ்ணு கோவில்களில் மட்டுமே இந்த வாகனத்தைக் காணலாம்.

கபாலீசுவரர் கோவிலில் பங்குனி மாத உற்சவத்தின் முதல் நாள் இரவன்று, தேவி கல்ப விருக்ஷ வாகனத்தின் மீதும், ஐயன் புன்னை மர வாகனத்தின் மீதும், முருகன் தன் இரு துணைவிமார்களுடன் வேங்கை மர வாகனத்திலும் வலம் வருவார்கள்.

*இரண்டு வகையான கல்ப விருக்ஷ வாகனம் உண்டு.* ஒன்று பல கிளைகளும், அதன் மீது இலைகளும் கொண்ட மரமாகக் காட்சி அளிக்கிறது. இதன் மேல் நிஜ இலைகளையும் அலங்காரமாக வைக்கப்படுவது உண்டு. மற்றொரு வகை வாழையைப் போல் ஒரே தண்டுடன் உயர்ந்து நின்று, இலைகள் உச்சியிலிருந்து விரிந்து வருவது போல் அமையப்பட்டிருக்கும்.

இம்மரத்தின் தோற்றம் குறித்து, நம் புராணங்களில் அதிகமாக தகவல்கள் ஒன்றும் இல்லை. அது தேவலோகத்து மரம் என்றும், மந்தாரை, பாரிஜாதம், சந்தனம், ஹரிசந்தனம், மற்றும் கல்ப விருக்ஷம் என ஐந்து பெயர்களைக் கொண்ட மரங்களைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. சில புராணங்கள் இந்த மரம் பாற்கடலை அசுரர்களும் தேவர்களும் கடைந்த போது தோன்றிய விசேஷமான பொருள்களில் ஒன்றெனக் கூறுகின்றன. சிவபெருமானின் கைலாயத்தில் உள்ள தோட்டத்தின் பெயர் கல்பகா என்பது குறிப்பிடத்தக்கது.

திருமங்கை ஆழ்வார், இமாலயத்தில் விஷ்ணுவின் இருப்பிடமான பத்ரியை விவரிக்கும்போது இந்த மரத்தையும் குறிப்பிடுகிறார்.

# Punnai Maram Vahana

The Punnai tree is a large evergreen tree found in abundance in the coastal regions of Tamil Nadu. It is particularly associated with Krishna, and this vahana is therefore an important one in Vishnu temples in general and those dedicated to Krishna in particular.

In mythology, the tree is the one, which Krishna climbed, after he hid the clothes of the bathing women of Mathura, to teach them to be less arrogant. The episode finds mention in several verses of the 4,000 verse *Divya Prabhandam*, especially by Andal and Kulasekara Azhwar.

The vahana replays this episode with four ladies appealing for help and looking above. In the middle of the vahana is a tree trunk and on the top is the space for the idol. Around the idol are carved wooden branches with leaves, fruits and many animals. In many temples, when this vahana was used, small parrots fashioned entirely out of leaves would be plugged into the branches and real leaves added to the decoration.

The vahana illustrated, is from the Parthasarathy temple, Chennai. The vahana found in the Rajagopalaswami Temple in Mannarkoil (near Ambasamudram) is made of bronze and is at least 5-feet high. The idol is placed under the hood of the snake. Behind it, the fan-shaped metal piece, which can be removed, has intricate carvings of branches, leaves, fruits, squirrels, birds, reptiles, monkeys and so on. This piece has a higher copper content and has a special lustre in sunlight. Sadly the temple, which was a powerful and popular one in the Chola times, is hardly frequented and it has been many decades since this vahana has been used.

Among the many literary references in ancient Tamil literature to this tree that grows commonly on the seashore, the *Natrinai* has a beautiful verse that equates the tree to the heroine's elder sister.

# புன்னை மர வாகனம்

தமிழ்நாட்டின் கடலோரப் பகுதிகளில் பரவலாகக் காணப்படும் மரம் புன்னை. இம்மரம் கிருஷ்ணருடன் தொடர்பு கொண்ட ஒன்றாதலால், அநேகமாக விஷ்ணு கோவில்களில், அதுவும் முக்கியமாக கிருஷ்ணர் கோவில்களில் வாகனமாக வலம் வருவதைக் காணலாம்.

மதுரா நகர் பெண்களின் கர்வத்தை அடக்க கிருஷ்ணர் அவர்கள் குளிக்கும்போது அவர்களுடைய ஆடைகளை இந்த மரத்தின் மேல்தான் ஒளித்து வைத்ததாக புராணம் கூறுகிறது. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திலும் குறிப்பாக ஆண்டாள் மற்றும் குலசேகராழ்வார் பாசுரங்களில் இந்த நிகழ்வு கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

உற்சவத்தில் இந்த வாகனம் ஊர்வலம் வரும் நாளில் நான்கு பெண்கள், வானத்தை நோக்கி வேண்டுவதையும் அவர்களுக்கு நடுவில் ஒரு மரக்கம்பும் அதன் உச்சியில் கிருஷ்ண விக்கிரஹமும் வைக்கப்படுவதற்கான பீடமும் உள்ள காட்சியைக் காணலாம். அதைச் சுற்றி மரத்தில் பல கிளைகள், இலைகள், பழங்கள், மிருகங்கள் ஆகியவை கலைத்திறனுடன் செதுக்கப்பட்டிருக்கும். பல கோவில்களில் இந்த வாகனம் ஊர்வலம் வரும் போது, இந்த மரத்தை இலையினால் செய்யப்பட்ட கிளிகள் மற்றும் நிஜமான இலைகள் கொண்டு அலங்கரிக்கப்படுவதுண்டு.

இங்கு சித்திரிக்கப்பட்டுள்ள வாகனத்தை சென்னை பார்த்தசாரதி கோவிலில் காணலாம். மன்னார்கோவில் ராஜகோபாலஸ்வாமி கோவிலில் இருக்கும் வாகனம் ஐந்து அடி உயரம் உள்ள வெண்கலத்தால் செய்யப்பட்ட ஒன்று. விக்கிரகம் பாம்பின் படத்திற்குக் கீழ் வைக்கப்படுகிறது. அதன் பின்னணியில், உலோகத்தால் செய்யப்பட்ட விசிறி போன்ற அமைப்பில் – தனியே எடுக்கக் கூடியது – கிளைகள், இலைகள், பழங்கள், அணில்கள், பறவைகள், ஊர்வனவைகள் மற்றும் குரங்குகள் ஆகியவை நுணுக்கமாகச் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இதன் உலோகக்கலவையில் செம்பு அதிகம் இருப்பதால் இது சூரிய ஒளியில் விசேஷமாக மின்னுவதைக் காணலாம். சோழர்கள் காலத்தில் மிகவும் பிரபலமாக இருந்த இந்த கோவிலிற்கு துரதிர்ஷ்டவசமாக இன்று பக்தர்களின் வருகை குறைந்து விட்டதால், இந்த வாகனத்தை வெளியில் எடுத்து நெடு நாட்களாகி விட்டன.

பழந்தமிழிலக்கியமான நற்றிணையில் வரும் பல குறிப்புகளில் நாயகியின் மூத்த சகோதரியாக, கடலோரங்களில் பரவலாகக் காணப்படும் இந்த மரத்தை வர்ணிக்கும் அழகிய பாடல் ஒன்று உண்டு.

## Sesha Vahana

This vahana is found in Vishnu and Shiva temples but is particularly important in Vishnu temples. Snakes in general and cobras in particular have an important role in Hindu mythology. They are associated with the netherworld, and have several names, identities and stories attached to them. The king of the snakes is Sesha or Adi (primal) Sesha. Adisesha is also known as Ananta or the endless one. This multi-hooded snake bears the earth on its head. It is also the couch on which Vishnu reclines, amidst an ocean of milk. In this form, Vishnu has Brahma the creator seated on a lotus extending from his navel. Sculptures of this form in Tirumeyyam and Mahabalipuram have Adisesha emitting poisonous fumes at two demons, Madhu and Kaitabha who come to attack Vishnu.

The other important form of Vishnu is in Vaikunta or heaven. Here, he is shown with his consorts or singly seated on the coils of the serpent. He is known therefore as Vaikuntanatha. This is his *para* form; Vishnu here is surrounded by liberated souls called Nithyasuries, like Garuda, Hanuman, Narada etc. It is the hope of all devout Vaishnavites to reach this abode after their death. A rare image of Vishnu on Ananta is in Parambanan, Java.

The other important snake is Vasuki, who is the lord of the underworld. He is usually shown lying below Vishnu's feet, in another incarnation of Vishnu as Varaha, the boar.

As a vahana, Adisesha has five, seven or nine heads. Each ends in a stylised face of a snake and a lion. The crest jewel that has magical properties is also depicted. The deity within, is usually installed in a standing posture. In some temples, the idols of Vishnu with his consorts are shown seated, as they would appear in Vaikunta. In some vahanas, under the coils of Adisesha, are 8 elephants and under them the tortoise. All these animals are said to bear the earth.

## சேஷ வாகனம்

இந்த வாகனமும் சிவன், விஷ்ணு என இரு கடவுள்களின் கோவில்களிலும் இருந்தாலும், முக்கியமாக விஷ்ணு கோவில்களில் அதிக சிறப்புப் பெற்று இருக்கிறது. இந்துக்களின் புராணங்களில் பொதுவாகவே பாம்புகளும், முக்கியமாக நாகப்பாம்பும் முக்கிய இடத்தை வகிக்கின்றன. அவை பூமிக்கடியே உள்ள பாதாள லோக வாசிகளாகவும், பல பெயர்கள், தோற்றங்கள், கொண்டு அநேக கதைகளின் கருப்பொருளாகவும் இருக்கின்றன. பாம்புகளின் அரசன் சேஷன் அல்லது (முதலாம்) ஆதிசேஷன். ஆதிசேஷனிற்கு அனந்தன் அல்லது முடிவே இல்லாதவன் என்றும் பெயர் உண்டு. பல தலைகளைக் கொண்ட இந்த பாம்பு உலகத்தைத் தன் தலையில் தாங்குகிறது. அது பாற்கடல் நடுவில் படுத்திருக்கும் விஷ்ணுவின் படுக்கையாகவும் கூறப்படுகிறது. இந்தத் தோற்றத்தில், படைப்புக் கடவுளான பிரம்மன், இவருடைய நாபியில் ஒரு தாமரை மலர் மேல் அமர்ந்திருப்பதாகச் சித்தரிக்கப்படுகிறது. திருமெய்யம் மற்றும் மஹாபலிபுரத்திலிருக்கும் இவ்வுருவச் சிலைகளில், விஷ்ணுவைத் தாக்க வந்த மது, கைடபன் என்ற இரு அசுரர்கள் மீது, ஆதிசேஷன் விஷம் உமிழ்வதைக் காணலாம்.

வேறு ஒரு முக்கியமான விஷ்ணுவின் உருவச் சித்திரம், அவர் வைகுந்தத்தில் இருப்பதைக் காட்டுவது. இங்கு விஷ்ணு தன் இரு தேவிமார்களுடன் பாம்பணையின் மேல் வீற்றிருப்பதைக் காணலாம். வைகுந்தத்தில் இருப்பதால் அவர் பெயர் வைகுந்தநாதர். இது அவருடைய பர உருவமாதலால், இங்கு அவர் பல நித்திய சூரிகள் அதாவது முக்தியடைந்த ஆத்மாக்களான கருடன், அனுமான், நாரதர் போன்றவர்கள் சூழக் கொலுவிருக்கிறார். மரணத்திற்குப் பின் இந்த நிலையை அடைவது தான் சிறந்த வைணவ பக்தர்களின் குறிக்கோளாகக் கருதப்படுகிறது. ஜாவாவில் பரம்பனன் என்னும் நகரத்தில், விஷ்ணு அனந்தன் மீது இருக்கும் தோற்றம் கொண்ட ஒரு அபூர்வமான சிலை இருக்கிறது.

புராணங்களில் கூறப்படும் மற்றொரு முக்கிய பாம்பான வாசுகி, பாதாள லோகத்தின் அதிபதி. விஷ்ணுவின் மற்றொரு அவதாரமான வராக உருவத்தில் அவர் காலடியில் கிடப்பதாக காண்பிக்கப்படுகிறது.

வாகனமாக அமைக்கப்படும் போது ஆதிசேஷனுக்கு ஐந்து, ஏழு அல்லது ஒன்பது தலைகள் இருக்கின்றன. ஒவ்வொரு முகமும் கலையுடனான பாம்புடன் இணைந்த சிங்க முகமாக அமைக்கப்படுகிறது. நாகத்தின் தலையில் பல மந்திர சக்திகள் கொண்ட இரத்தினமும் சித்தரிக்கப்படுகிறது. அதன் அடியில் வைக்கப்படும் மூர்த்தி அநேகமாக நின்ற நிலையில் காணப்படும். எனினும், சில கோவில்களில், தன் இரு துணைவிமார்களுடனும், வைகுந்தத்தில் இருப்பது போல உட்கார்ந்த நிலையிலும் காணப்படுகிறார். சில வாகனங்களில், ஆதிசேஷனிற்குக் கீழே எட்டு யானைகளும் அதற்கும் அடியில் ஒரு ஆமையும் இருக்கும் தோற்றம் காணப்படுகிறது. இந்த மிருகங்களெல்லாம் பூமியைத் தாங்குவதாக கூறப்படுபவை.

## Kailasa Vahana

Kailasa is the mountain abode of Shiva. This vahana is unique to Shiva temples. The vahana depicts more than just the mountain. It usually depicts the scene of Demon Ravana trying to lift the mountain. The story is found in several *Puranas* and alluded to in several verses of the *Tevaram*.

Ravana, the king of Lanka was a great devotee of Shiva. Unable to bear the separation from Shiva, Ravana decided to lift the mountain and carry it with Shiva, to Lanka so that he would be able to worship Shiva regularly. As he lifted the mountain, Shiva pressed down with his little toe and Ravana was crushed and he repented for his arrogance.

The vahana usually has the 10-headed Ravana with his 20 hands, of which two are in the act of lifting the mountain and two playing the veena, an instrument he was adept at. Some vahanas creatively, have the entire scene carved over a tortoise. Others have small bas-reliefs in the replica of the mountain, with the many animals and sages that are said to live on the divine mountain. Among the several references to this episode, a moving one is in the *Kamba Ramayana*. On the first day of war between Rama and Ravana, the latter loses and Rama asks him to go back and return for the fight the next day instead of killing him. As Ravana walks away from the battleground, the poet says,

*His broad chest can even dash an elephant,*
*His broad shoulders lifted the mountain itself,*
*He taught the great texts to Narada himself with expertise,*
*His chest had many garlands and his head a radiant crown,*
*He had with him the sword got from Shiva,*
*All of this, he left back in the battlefield, even his valour,*
*As he entered Lanka empty-handed.*

(Yudhakandam, Kamba Ramayana)

## கைலாச வாகனம்

கயிலாயம் சிவனின் இருப்பிடம். அதனால் இந்த வாகனம் சிவன் கோவில்களுக்கே உரித்தானது. இந்த வாகனம் ஒரு மலையை மட்டுமல்லாமல், ராவணன் இம்மலையை எடுக்க முயன்ற கதையையும் காட்டும் வகையில் அமைந்துள்ளது. இந்தக் கதை பல புராணங்களில் கூறப்பட்டுள்ளதுடன் இதனைப் பற்றிய குறிப்புகள் தேவாரத்தில் பல இடங்களிலும் இருப்பதைக் காணலாம்.

இலங்கை மன்னனான ராவணன் சிவனைப் பிரிந்து இருக்க முடியாமல், கைலாய மலையையே சிவலிங்கத்துடன் தன்னுடன் இலங்கைக்குக் கொண்டு சென்று, அங்கு அதற்கு பூசைகள் செய்ய விரும்பினான். அவன் அதைத் தூக்க முயற்சிக்கையில், சிவபெருமான் தன் காலின் சிறுவிரலால் மலையை அழுத்தியவுடன் ராவணனும் அதனடியில் அகப்பட்டுக்கொண்டு, பின் தான் கர்வம் கொண்டதின் தவறை உணர்ந்து வருந்தினான்.

இந்த வாகனம், அநேக இடங்களில், ராவணனை பத்துத் தலைகளுடனும் இருபது கைகளில் இரு கைகள் மலையை எடுக்கும் முயற்சியிலும், இரு கைகள் வீணை விற்பன்னனான அவன் வீணையை வாசிப்பதாகவும் சித்தரிக்கின்றன. சில இடங்களில் இந்த வாகனம் மிக்க கலைத் திறனுடன் ஒரு ஆமையின் மீது மலை இருப்பதுபோல் அமைக்கப்பட்டிருக்கும். வேறு சில வாகனங்களில், இந்த தெய்வீக மலை மீது வசிப்பதாகக் கூறப்படும் பல மிருகங்களும் முனிவர்களும் செதுக்கப்பட்டிருக்கும். கம்பராமாயணத்தில் இந்த நிகழ்வு மிக அழகாக விவரிக்கப்பட்டுள்ளது. ராம—ராவண யுத்தத்தின் முதல் நாளன்று, ராவணன் போரிட்டுக் களைத்துப் போனதைக் கண்ட ராமர், அவனை அப்போதே கொல்லாமல் களத்திலிருந்து போய்விட்டு மறுநாள் வரும்படி கூறுகிறார். ராவணன் போர்க்களத்திலிருந்து செல்வதை கவிஞன் மிக அழகாக இவ்வாறு வர்ணிக்கிறார்:

*வாரணம் பொருத மார்பும் வரையினை எடுத்த தோளும்*
*நாரதமுனிவன் கேட்ப நயம்பட உரைத்த நாவும்*
*தாரணி மவுலிபத்தும் சங்கரன் கொடுத்த வாளும்*
*வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புக்கான்.*

(யுத்த காண்டம்—கம்பராமாயணம்)

## Vimana

This vahana is common to both Shiva and Vishnu temples. The name of the vahana varies from temple to temple. In the Madurai Meenakshi and Srivilliputtur temples, it is called the Indra Vimana, while in the Kanchipuram Varadaraja temple, it is called the Punyakoti Vimana. In Sriperumbudur, it is called the Mangalagiri.

The Vimana is the pyramidal tower above the sanctum, as opposed to the *gopuram* that is the entrance gateway. The Vimana is as sacred to the devotees, as the deity it towers over. Devotees, when they circumambulate the sanctum, pause to pray to the Vimana as well, from the outside.

In Vishnu temples, especially the 106 in the earth that are particularly sacred, each Vimana has a name as well.

In early temples, the Vimana was usually taller than the gopura, examples being the early Pallava temples such as the Kanchipuram Kailasanatha temple and more forcefully the Brihadeeswara temple, Thanjavur. However, as temples became bigger, kings found it less expensive to build larger gopuras and smaller Vimanas. In the Vijayanagar period, it was common for Vimanas to be much smaller than gopuras.

The evolution of Vimanas is represented in the five *rathas* in Mahabalipuram. Traditional Vimana shapes include square, rectangular, apsidal (resembling the behind of an elephant) and very occasionally, circular.

In vahanas, the shape is invariably square or rectangular. In Thanjavur, as a special mark for Shiva's chosen vehicle, the Rishabha, the vahana is placed inside a Vimana constructed and decorated out of palm tree leaves. The Vimana Vahana in Srivilliputtur is preceded by a *manja neer vilayattu* where devotees throw water mixed with turmeric on each other in jest.

## விமானம்

இந்த வாகனமும் சிவன், விஷ்ணு இருவர் கோவில்களுக்கும் பொதுவானவை. இந்த வாகனத்தின் பெயர் கோவிலிற்கு கோவில் வேறுபடுகின்றது. மதுரை மீனாக்ஷி மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் கோவில்களின் விமானம் இந்திர விமானமென்றும் காஞ்சி வரதராஜர் கோவிலில் புண்யகோடி விமானமென்றும், ஸ்ரீபெரும்புதூரில் மங்களகிரி விமானமென்றும் அழைக்கப்படுகின்றது.

நுழைவாயிலிற்கு மேல் இருக்கும் கோபுரம் போல் கர்ப்பகிருகத்தின் உச்சியில் இருப்பது விமானமென்று கூறப்படுகிறது. கர்ப்பகிருகத்திலிருக்கும் விக்கிரகத்தை போலவே அதன் மேல் உள்ள ஓங்கி நிற்கும் விமானமும் பக்தர்களுக்கு முக்கியத்துவம் வாய்ந்ததுதான். அவர்கள், கர்ப்பக்கிருகத்தை வலம் வரும் போது வெளியில் தெரியும் விமானத்தையும் வணங்குகிறார்கள்.

விஷ்ணு கோவில்களில், அதுவும் சிறப்பாக பாடல் பெற்ற பூமியில் உள்ள 106 கோவில்களிலும், விமானங்களுக்கு தனிப் பெயர்கள் உண்டு.

முற்காலத்தில், விமானம் கோபுரத்தை விடவும் உயர்ந்ததாக அமைக்கப்பட்டன. இதை, காஞ்சிபுரம் கைலாசநாதர் கோவிலிலும், சிறப்பாக, தஞ்சாவூர் பிருஹதீசுவரர் கோவிலிலும் காணலாம். ஆனால், கோவில்கள் பெரியதாக எழும்பத் துவங்கிய பின், பெரிய கோபுரங்களும் சிறிய விமானங்களும் கொண்ட கோவில்கள் கட்டுவது சிக்கனமாக இருப்பதை அரசர்கள் கண்டார்கள். விஜயநகர் காலத்தில், கோபுரங்களைவிட விமானங்கள் சிறியதாக அமைக்கப்படுவது வழக்கத்தில் வந்தது.

மஹாபலிபுரத்தில் உள்ள ஐந்து ரதங்களில், விமானங்களின் பரிணாம வளர்ச்சியைக் காணலாம். சதுரம், நீள்சதுரம், யானையின் பின் பக்கத் தோற்றம், அபூர்வமாக உருண்டை என பல வடிவங்களில் மரபு சார்ந்த விமானங்கள் அமைக்கப்படுகின்றன.

விமான வாகனங்கள் சதுரம் அல்லது நீள்சதுர வடிவங்கள் கொண்டவை. தஞ்சாவூரில், சிவனின் அபிமான வாகனமான ரிஷபருக்கு, பனை ஓலைகள் அலங்காரமாக வேய்ந்த விமானத்தின் கீழ் வாகனம் வைக்கப்படுகிறது. ஸ்ரீவில்லிபுத்தூரில் விமான வாகன ஊர்வலத்திற்கு முன்னால், ஒருவர் மேல் ஒருவர் மஞ்சள் கலந்த நீரை வீசி விளையாடும் "மஞ்சள் நீர் விளையாட்டு" கொண்டாடப்படுகிறது.

## Chapparam

The Chapparam is common to both Vishnu and Shiva temples. It is a simple construction of four pillars on a base that supports a lightly decorated roof. The difference between this vahana and the vimana is the absence of a tower.

The Chapparam is given different names based on the colour of the cloth that is draped between the pillars. The colour is also matched by the flowers and jewels used for decorating the deity. White, green and red are some popular colours. The Nanguneri Thothathrinatha temple has a Chapparam, inset with coloured glass and is known as the 'Kannadi Chapparam'.

In the past, the Saptavitanka temples in Thanjavur, had a special procession for Nataraja with special dances. Sadly, we have only the names of the dances, but do not know whether the dance was performed in front of the deity in procession or whether the vahana itself was a part of the dance, in the way it was carried.

Tiruvarur–Ajabaa Natanam: The Chapparam is raised and lowered, similar to the movement of the body, when taking a heavy breath.

Tirumarikadu (Vedaranyam)–Hamsa Pada Natanam: Not performed today, possibly imitating the gait of a hamsa.

Nagai–Paraavara Taranga Natanam: Not performed today but possibly the movement was like the waves of the ocean.

Tirunallar–Unmaththa Natanam: Not performed today. Unmaththa means intoxicated, so the dance movement might have been like that of an intoxicated person.

Tiruvaymur–Kamala Natanam: Not performed today but possibly the movement was like that of a lotus.

Tiru kolili (Tirukuvalai)–Bringha Natanam: Not performed today, but possibly the movement was like that of a bee.

Tirukaarayil (Tirukaravasal)–Kukuta Natanam: Not performed today. Kukuta means a cockerel/rooster. The dance movement was like that of this bird.

## சப்பரம்

சிவன், விஷ்ணு இரு கோவில்களிலும் வழக்கத்திலிருக்கும் வாகனம் சப்பரம். கனமற்ற கூரையைத் தாங்கி, நான்கு தூண்களைக் கொண்ட ஒரு எளிய மேடை தான் இந்த வாகனம். இந்த வாகனத்தின் உச்சியில் கோபுரம் இல்லாததுதான் இதை விமான வாகனத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டும்.

தூண்களைச் சுற்றி சுற்றப்பட்டிருக்கும் துணியின் வண்ணத்தைப் பொறுத்து சப்பரங்களின் பெயர்களும் வேறுபடும். இறைவனை அலங்கரிக்க உபயோகிக்கப்படும் மலர்கள் மற்றும் ஆபரணங்களை ஒத்து, இந்தத் துணியின் வண்ணமும் இருக்கும். வெள்ளை, பச்சை, சிகப்பு ஆகிய வண்ணங்கள் அதிகமாக உபயோகத்தில் இருப்பவை. நாங்குநேரி தோத்தாதிரிநாதனின் கோவில் சப்பரத்தின் உள்ளே கண்ணாடி கற்கள் பதிக்கப்பட்டிருக்குமாதலால், அதைக் கண்ணாடி சப்பரம் என்று குறிப்பிடுவார்கள்.

தஞ்சாவூரில் உள்ள ஸப்தவிடங்கர் கோவில் நடராஜர் சப்பரத்தில் பவனி வரும் போது விசேஷமான நடனங்கள் அவர் முன் ஆடப்படும். துரதிர்ஷ்டவசமாக, இன்று நடனங்களின் பெயர்கள் மட்டுமே மிஞ்சியுள்ளன. அந்த நாட்டியங்கள், ஊர்வலங்களில், மூர்த்தியின் முன்னால் தனிப்பட்டவர்களால் ஆடப்பட்டனவா அல்லது சப்பரமும் அதைத் தாங்கி வந்தவர்களின் ஆட்டம் அசைவுகளுடன் நடனத்தில் பங்கேற்றதா என்பதைப் பற்றிய விவரங்கள் ஏதும் இன்று இல்லை.

திருவாரூர் –அஜபா நடனம் – சப்பரம் மேலும் கீழுமாக உயர்த்தி தாழ்த்தப்படும் – நீண்ட மூச்சு விடும்பொழுது உடல் அசைவது போல்.

திருமறைக்காடு (வேதாரண்யம்) – ஹம்ஸபாத நடனம் – ஹம்ஸ நடையை ஒத்து இருந்திருக்கக் கூடிய இந்த நடனம் இப்போது ஆடப்படுவதில்லை.

நாகை – பராவர தரங்க நடனம் – இன்று ஆடப்படுவதில்லை; சமுத்திரத்தின் அலைகளை ஒத்த அசைவுகளைக் கொண்டதாக இது இருந்திருக்கலாம்.

திருநள்ளாறு – உன்மத்த நடனம் – இன்று ஆடப்படுவதில்லை. மயக்க நிலையில் மெய்மறந்து ஆடுவது.

திருவாய்மூர் – கமல நடனம் – இன்று ஆடப்படுவதில்லை; அசைவுகள் தாமரையைப் போன்று இருந்திருக்கலாம்.

திருக்கொளிலி (திருக்குவளை) – பிருங்க நடனம் – இன்று வழக்கிலில்லாத இந்த நடனம் வண்டுகளின் அசைவுகளைப் போன்று இருந்திருக்கலாம்.

திருகாரயில் (திருக்கரவாசல்) குக்குட நடனம் – இன்று வழக்கில் இல்லை. சேவல் நடனமாடுவது எனக் கொள்ளலாம்.

## Pallakku

The Palanquin or *Pallakku* is the most basic form of vahana that every temple will have. Before the vahana of the deity ventures out, the *Sribali* or sacred symbol will be carried out on the 4 streets, to the sound of bells, to inform people to await the arrival of the main vahana with the deity. The Sribali for Vishnu is an image of the Sudarshana or discus and for Shiva, it is the trident. These are taken out in a palanquin called the *tholoku-iniyan* literally translated into, 'that which is easy on the shoulders.' This kind of palanquin is like a small box with doors on the longer side and light enough for just two people to carry.

Sometimes, when the deity is inside, the bearers wave the vahana in a snake-like motion and this is called the *magudi*.

The other Pallakku is a rectangular-shaped structure with ample seating space inside. The smaller ends are slightly higher and in the middle is the pole that bears the weight. This pole bends up in an arch over the palanquin and is called a *kanai*. This Pallakku is sometimes covered in gold, as in the case of temples in Madurai and Kanchi, or even out of ivory as in Thiruvidenthai.

In the past, when *devadasis* were attached to temples, among their *repertoire* were welcoming songs to be sung, during the *padiyethal*, the ceremony conducted at the doorstep when the palanquin or vahana came back into the temple. Singing, dancing and gracefully moving back, while their faces and bodies were still facing the incoming vahana, they would, through songs, welcome the Lord back into his sanctum. In the 3 Vishnu temples that have the Arayar community, Srirangam, Azhwar Tirunagari and Srivilliputtur, the Arayars still conduct this beautiful ritual, even when there is only a simple Pallakku that takes the deity within the walls of the temple.

## பல்லக்கு

எல்லாக் கோவில்களிலுமே காணப்படும் ஒரு அடிப்படையான வாகனம் பல்லக்கு. வாகனத்தின் முன் அதன் வருகையைக் கட்டியம் கூறுவது போல், ஒரு புனிதச் சின்னமான ஸ்ரீபலி மணிகளின் ஒலிகளுடன் கொண்டு செல்லப்படும். விஷ்ணுவின் ஸ்ரீபலி சுதர்சன சக்கரமும், சிவனிற்கு திரிசூலமும் ஆகும். 'தோளுக்கு இனியன்' என அழைக்கப்படும் சுமக்க எளிதாக இருக்கும் பல்லக்குகளில் இவை சுமந்து செல்லப்படுகின்றன. இருவர் எளிதில் கொண்டு செல்லும் வகையில் இது, நீள வாட்டு முனைகளில் அமைக்கப்பெற்ற கதவுகளுடனான ஒரு சிறிய பெட்டகமாக இருக்கும்.

சில சமயங்களில் மூர்த்தி அகத்திருக்கையில், இந்த வாகனத்தை சுமப்பவர்கள், வாகனத்தை பாம்பைப்போல் வளைத்து ஆட்டுவார்கள். இதற்கு மகுடி என்று பெயர்.

மற்றொருவிதப் பல்லக்கு, நீள்சதுர அளவில், உள்ளே விசாலமாக இடம் கொண்டிருக்கும். அதன் நுனிகள் சிறுத்தும் சற்றே உயரத்திலும், நடுவில் அந்தப் பல்லக்கின் கனத்தைத் தாங்கும் கழியும் அமைக்கப்பட்டிருக்கும். பல்லக்கின் மேல் வில் போல் வளைந்திருக்கும் இந்தக் கழிக்கு கணை என்று பெயர். மதுரை, காஞ்சி ஆகிய இடங்களில் உள்ள பல்லக்குகளைப் போல் இவை தங்கத்தகடுகளால் அல்லது திருவிடந்தைகோவிலில் இருப்பது போல தந்தத்தினால் மூடப்பட்டிருக்கலாம்.

பண்டைய நாட்களில் கோவில்களைச் சார்ந்த தேவதாசிகள், பல்லக்கிலோ அல்லது வாகனங்கள் மீதோ வலம் வந்து, பின் கோவிலுக்கு திரும்பும் மூர்த்தியை வரவேற்கும் படியேத்தல் என்னும் சடங்கு செய்யப்படும் போது பாட சில பாடல்கள் கற்று வைத்திருப்பார்கள். உள்ளே வரும் வாகனத்தைப் பார்த்தபடியே அழகாக ஆடியும் பாடியும் பின்னோக்கி சென்றுகொண்டே, இறைவனை மீண்டும் கர்ப்பகிருகத்தினுள் கொண்டு செல்வார்கள். ஸ்ரீரங்கம், ஆழ்வார்திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய இடங்களில் உள்ள விஷ்ணு கோவில்களில், இன்றும் அரையர் சமூகத்தைச் சேர்ந்த அர்ச்சகர்கள், ஒரு எளிய பல்லக்கு கோவிலின் உட்பிராகாரங்களிலேயே வலம் வந்து திரும்பும் போது இந்த அழகான சடங்கை நிறைவேற்றுவதைப் பார்க்கலாம்.

## Kannadi Pallakku

This is a palanquin with long handles that curve upwards. The handles are not used but the entire palanquin is on a base that has 4 wooden/ bamboo poles to carry the vahana.

The speciality is that the entire palanquin and handles have several small pieces of mirror inset in them and the corners covered with gilt. The mirror pieces reflect the light and thereby create a magical effect. The effect is enhanced with the handles having long pendants, again inset with mirrors.

The Triplicane Parthasarathy temple has one of these vahanas that was recently restored. It was originally gifted to the temple in the 18th/early 19th century by a Muthu Jamedar in Madurai. The other famous Kannadi Pallakku is in the Madurai Meenakshi Amman temple. The Srivilliputtur temple also has a fine example.

Several Thanjavur temples have, or used to have vahanas with this mirror workmanship. This work was usually done by the families of those who created the Thanjavur-style paintings as well. King Serfoji II is said to have gifted one to the Tiruvarur temple.

When the Pallakku is in procession, if it is decorated entirely with flowers, it is called a *Poo-Pallakku*, if decorated with the fragrant root grass, it is called the *Vettiver-Pallakku*. The Pallakku is also sometimes, covered with an embroidered cloth sewn with pearls. This is known as a *Muthu-Pallakku*. On those days, the deity is also decorated with mostly pearl ornaments for added impact. It is considered inauspicious for sunlight or rain to fall on the main deity. Therefore, unless the Pallakku is taken around within the temple precincts, there is always a protective covering over the palanquin. If this is of cloth, the cloth is called a *pannagam*. In most temples, when the Pallakku is used as a vahana, the deity is given a unique decoration, like the enchantress, Mohini.

## கண்ணாடிப் பல்லக்கு

மேல் நோக்கி வளைந்த நீண்ட பிடிகளைக் கொண்டது இந்தப் பல்லக்கு. அந்தக் கைப்பிடிகளை வாகனத்தை தூக்குவதற்கு உபயோகிக்காமல், முழு வாகனத்தையும் ஒரு பீடத்தின் மீது வைத்து, நான்கு மரமோ அல்லது மூங்கில் கம்புகளையோ பல்லக்கில் சொருகி வாகனத்தை சுமப்பார்கள்.

இந்தப் பல்லக்கின் விசேஷம், பல்லக்கு, மற்றும் அதன் பிடிகள் முழுவதிலும் சிறிய கண்ணாடித் துண்டுகள் பதிக்கப்பட்டு, ஓரங்களில் தங்கத்தகடு ஒட்டப்பட்டு இருப்பதுதான். ஆயிரமாயிரம் கண்ணாடித் துண்டுகள் சூரிய ஒளியை பிரதிபலித்து ஒரு மாயாஜாலத்தை உண்டாக்கிவிடுகின்றன. அதற்கு மேலும் அழகூட்டும் வண்ணம், அவைகளின் கைப்பிடிகளிலிருந்து கண்ணாடிக் கற்கள் பதித்த நீண்ட முகப்புகள் தொங்கும்.

அண்மையில் புதுப்பிக்கப்பட்ட இத்தகைய ஒரு பல்லக்கை திருவல்லிக்கேணி பார்த்தஸாரதி கோவிலில் காணலாம். மதுரையின் முத்து ஜமேதார் என்பவரால், இது 18ம் நூற்றாண்டின் இறுதியில்/ 19ம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் இக்கோவிலுக்கு நன்கொடையாக அளிக்கப்பட்டது. இத்தகைய மற்றொரு பிரபலமான பல்லக்கு மதுரை மீனாக்ஷி அம்மன் கோவிலில் உள்ளது. ஸ்ரீவில்லிபுத்தூர் கோவிலிலும் அழகிய பல்லக்கு ஒன்றிருக்கிறது.

கண்ணாடி வேலைகள் செய்யப்பட்ட வாகனங்கள் பல தஞ்சாவூர் கோவில்களிலும் இருந்தன. தஞ்சாவூர் பாணி சித்திரங்கள் வரையும் குடும்பத்தினரே அந்தக் கண்ணாடி வேலைகளையும் செய்பவர்களாக இருந்தனர். இத்தகைய வாகனம் ஒன்றை சரபோஜி மன்னன் திருவாரூர் கோவிலுக்கு அளித்ததாகக் கூறப்படுகிறது.

ஊர்வலத்திற்கு பயன்படுத்தப்படும் பல்லக்கு, பூக்களால் அலங்காரம் செய்யப்பட்டிருந்தால், அதற்கு பூப்பல்லக்கு என்று பெயர். வாசனை மிக்க வெட்டிவேர்களால் அலங்கரித்திருக்கும் போது அதை வெட்டிவேர் பல்லக்கு என்பார்கள். முத்துக்கள் வைத்துத் தைக்கப்பட்ட துணியால் மூடப்பட்டிருக்கும் பல்லக்கு முத்துப் பல்லக்காகும். முத்துப் பல்லக்கில் பவனி வரும் நாட்களில், மூர்த்தியையும், அதற்கு மேலும் அழகு சேர்க்க, முத்துக்களால் அலங்கரித்திருப்பார்கள். வெயிலோ மழையோ மூர்த்தியின் மீது விழுவது சகுனக்குறைவாகக் கருதப்படும். அதனால், கோவிலினுள் வரும் ஊர்வலங்களில் தவிர, வெளியே போகும் போதெல்லாம் பல்லக்கு மூடப்பட்டிருக்கும். இது துணியால் ஆனதென்றால், அந்தத் துணிக்கு, பண்ணகம் என்று பெயர். பல கோவில்களிலும் பல்லக்கு வாகன ஊர்வலத்தின் போது விசேஷ அலங்காரமாக விஷ்ணுவை மோகினி என்ற பெண்ணைப் போல் அலங்காரம் செய்கின்றனர்.



## Aalum Pallakku

This is a rare form of a palanquin and is found in Shiva and Vishnu temples. The vahanas in the Triplicane Parthasarathy temple and in the Tiruvallur Veeraraghava temples are particularly fine ones. The Nanguneri Perumal temple also has a fine vahana of this type.

*Aal* in Tamil means a person, appropriately, the vahana or the palanquin is carried by four men. The four men, two in the front and two in the rear, bear the two ends of the pole and in the middle is a palanquin on which the deity is installed. The Triplicane vahana has realistic details of the four men.

## ஆளும் பல்லக்கு

அரிய வடிவிலான ஆளும் பல்லக்கு என்பது சிவன், விஷ்ணு இரு கோவில்களிலுமே காணப்படும் ஒருவித பல்லக்கு. இவைகளில் முக்கியமாகக் கூறப்பட வேண்டியவை திருவல்லிக்கேணி பார்த்தஸாரதிக் கோவிலிலும் திருவள்ளூர் வீரராகவப் பெருமாள் கோவிலிலும் உள்ள பல்லக்குகள். நாங்குநேரி பெருமாள் கோவிலிலும் இந்த வாகனம் உண்டு.

பெயரில் இருப்பது போலவே நான்கு ஆட்கள், முன்புறம் இருவரும், பின்புறம் இருவரும் பல்லக்கின் இரு முனைகளையும் தாங்குவது போலவும் நடுவில் பல்லக்கில் மூர்த்தியை வைப்பதற்கான இடமும் அமைக்கப்பட்டிருக்கும். திருவல்லிக்கேணியில் பார்த்தஸாரதிக் கோவிலில் இருக்கும் இந்த வாகனத்தில் உருவங்கள் நுணுக்கமான முறையில் நிஜமான மனிதர்களைப் போலவே செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.



## Govardhana Giri Vahana

This vahana is found in the Mannargudi Rajagopala temple and in the Andal temple at Srivilliputtur. The mountain that Krishna lifted with just his little finger to protect the village from the wrath of Indra, is symbolically represented as an umbrella with a pattern that resembles the shape of the mountain.

*An image of this episode in stone can be seen in Mahabalipuram.*

## கோவர்த்தன கிரி வாகனம்

இந்த வாகனம் மன்னார்குடி ராஜகோபாலஸ்வாமி கோவிலிலும், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோவிலிலும் காணப்படும். இந்திரன் கோபத்திலிருந்து மக்களைக் காக்க கிருஷ்ணன் சுண்டுவிரலில் தூக்கி நிறுத்திய மலையை குறிப்பதற்காக, மலை வடிவத்தில் குடை போன்று இது அமைக்கப்பட்டுள்ளது.

இந்த காட்சி மஹாபலிபுரத்தில், கல்லில் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

## Parangi Naarkali

An unusual vahana seen in the Azhwar Tirunagari temple and a handful of other Vishnu temples close to Tirunelveli is the *Parangi Naarkali*.

The use of furniture in India was always minimal, till colonial influence came about. The vahana is a spacious square chair with four legs. The word Parangi, it is believed, is a corruption of the word, French. This object is also referred to in the 17th century texts of the Thanjavur Nayaks, as a chair on which the king sat with his legs folded up.

This vahana is used by Madhurakavi Azhwar, as he watches Nammazhwar sing praises of the nine temples in and around Azhwar Tirunagari on the occasion of Nammazhwar's birthday in the month of *Vaikasi*, in the *Visaka* asterism.

Nammazhwar is seen in the golden Hamsa Vahana and the ten deities from the nine temples on their own Garuda Vahanas.

Srivilliputtur also has a Parangi Naarkali that is plated with gold. It is used during the Adi festival that culminates on the Pooram asterism, the birth star of Andal.

## பரங்கி நாற்காலி

ஆழ்வார் திருநகரி மற்றும் திருநெல்வேலியின் அருகிலுள்ள சில கோவில்களில் மட்டுமே காணக்கிடைக்கும் ஒரு வித்தியாசமான வாகனம் பரங்கி நாற்காலி வாகனம்.

ஆங்கிலத் தாக்கத்திற்கு முன் இந்தியாவின் மரச்சாமான்களின் எண்ணிக்கை மிகச் சொற்பமாகவே இருந்திருக்கிறது. இந்த வாகனம் ஒரு பெரிய சதுர நாற்காலி தான். பரங்கி என்னும் வார்த்தை பிரஞ்ச் என்பதன் மருவாகக் கருதப்படுகிறது. இந்த நாற்காலி 17ம் நூற்றாண்டின் தஞ்சாவூர் நாயக்கர்களைப் பற்றிய நூல்களில், மன்னன் *தன் கால்களை மடித்து உட்கார்ந்த ஒரு நாற்காலியாக கூறப்பட்டுள்ளது.*

நம்மாழ்வார் ஆழ்வார் திருநகரியைச் சுற்றியுள்ள ஒன்பது திருத்தலங்களைப் பற்றிப் பாடியதைக் கண்டு மகிழ்ந்த மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வாரின் திருநக்ஷத்திரமான வைகாசி விசாகத்தன்று இந்த வாகன நாற்காலியில் அமர்ந்திருப்பதைக் காணலாம்.

நம்மாழ்வார், தங்கத்திலான ஹம்ஸ வாகனத்திலும் பத்து விஷ்ணு மூர்த்திகளும் தத்தம் கருட வாகனங்களிலும் அப்போது பவனி வருவார்கள்.

தங்கத் தகடுகளாலான ஒரு பரங்கி நாற்காலி ஸ்ரீவில்லிபுத்தூரிலும் உள்ளது. ஆண்டாளின் பூர நக்ஷத்திரத்துடன் முடிவுறும் ஆடி மாத உற்சவத்தின் போது இந்த வாகனம் உபயோகப்படுத்தப்படுகிறது.

# Ther

The grandest part of a festival, is not a vahana, but is included in this list because the procession of the vahanas culminate with the *Ther* on the penultimate day of the Brahmotsavam. The 8th or 9th day of the festival is the day for the Ther. The Ther is followed by the *Thirtha vaari*, when the deity goes for a ritual bath in the nearest river in the morning and there is a final procession in the evening, usually of the deity decorated in a special fashion, with false arms, legs and a different dress that is fastened to the deity. For example, a standing bronze image will (because of the decoration) look like a crawling Krishna.

Among the earliest references to a Ther in literature, is found in the Jain work, *Civakachinthamani*, in the *Suramanjari Ilambagam* (chapter). A lady prays to Kama, the God of Love and promises him a chariot decorated with gems, having the flag with a *Makara*, drawn by a horse and several villages, if he unites her with Ceevakan (Verse 63).

Everything about a Ther is massive. The wheels are at least 1.5 to 2 feet thick, and the whole structure towers to at least 20 to 25 feet. Many have rotted away or have been dismantled and sold for their superb carvings. The base of the Ther is permanent wood. The rest is made of poles covered with appliquéd cloth. The ends have cylindrical-shaped, hanging *tombais* made of appliquéd cloth. Towering over this is the brass finial with a fluttering flag. The Ther has a painted image of Brahma as the charioteer and also horses that prance from one of the tiers. Those in Srirangam have wings as well.

On the night before the Ther runs, it is a practice to sacrifice a cock. On the day, the Sribali, an image of the discus for Vishnu temples and the trident for Shiva temples is taken around, to inspect the roads on which the Ther will run. Several hundred people then assemble and after the deity is placed inside the Ther, they pull the chains and drag the Ther around the four streets.

Both Tirumangai Azhwar's *Thiruvezhukutrikai* and Tirugnanasambandar's similar work use puranic episodes and create a seven-tier structure that can be visually represented as a Ther.

# தேர்

உற்சவங்களில் மிக முக்கியமான நாள் தேர்த்திருவிழா நாள். இதை வாகனமென்று கூற முடியாவிட்டாலும், பிரம்மோத்ஸவத்தின் போது வாகனங்களின் ஊர்வலங்களின் கடைசி நாளுக்கு முந்தைய நாளன்று தேரோட்டம் நடைபெறுவதால் இதையும் இந்த வரிசையில் குறிப்பிட முனைந்திருக்கிறோம். எட்டாவது அல்லது ஒன்பதாவது நாளன்று தேர். தேரைத் தொடர்ந்து, தீர்த்தவாரி என்னும் இறை உருவங்களின் புனித நீராடல். காலையிலும் மாலையிலும் ஊர்வலத்திற்காக மூர்த்திகள் விசேஷ அலங்காரங்களுடன், செயற்கை கைகள், கால்கள் பொருத்தப்பட்டு, வித்தியாசமான உடைகளணிந்து காணப்படுவார்கள். உதாரணமாக நிற்கும் நிலையில் அமைக்கப்பட்டிருக்கும் ஒரு வெண்கல விக்கிரகம் தவழ்ந்த கிருஷ்ணனைப்போல ஜோடிக்கப்பட்டிருக்கும்.

இதைப் பற்றின மிகப் பழைய குறிப்புக்கள், ஜைன நூலான சீவக சிந்தாமணியில், சுரமஞ்சரி இளம்பகம் என்னும் பகுதியில் காணப்படுகின்றன. ஒரு நாயகி, தன்னை சீவகனுடன் இணைத்து வைத்தால் காதல் கடவுளான காமனுக்கு, இரத்தினங்கள் இழைத்து, மகரக் கொடியுடன் கூடிய குதிரைகளால் இழுக்கப்படும் தேர் ஒன்றை பரிசளிப்பதாகவும் வாக்களிக்கிறாள். (v . 63)

தேரைப் பற்றிய அனைத்துமே அளவில் பெரியவை. அதன் சக்கரங்கள் குறைந்த பக்ஷம் 1.5 அடி முதல் 2 அடி வரை பருமனும், முழுவதுமாக 20–25 அடிகள் உயரத்திலும் அமைக்கப்பட்டிருக்கின்றன. பல தேர்களும் மக்கி மடிந்தோ, அக்கு அக்காக பிரிக்கப்பட்டோ அல்லது அதன் மேல் உள்ள அபூர்வமான சித்திர வேலைப்பாடுகளுக்காக விற்கப்பட்டோ அழிந்து போயிருக்கின்றன. அதன் அடித்தளம் எப்போதுமே மரத்தினால் தான் செய்யப்பட்டிருக்கும். மற்ற பாகங்கள் கழிகளாலும் அதனைச் சுற்றி தைக்கப்பட்டிருக்கும் பல வித சித்திரங்கள் கொண்ட துணியினாலும் அமைக்கப்பட்டிருக்கும். அதே வகைத் துணியினால் செய்யப்பட்ட உருளை வடிவம் கொண்ட தோம்பைகளால் அதன் நுனிகள் அலங்கரிக்கப்பட்டிருக்கும். எல்லாவற்றிற்கும் சிகரமாக, பித்தளையால் ஆன கொடிமரமும், காற்றில் படபடக்கும் கொடியும் இருக்கும். தேரின் சாரதியாக பிரம்மனின் உருவமும், அதன் அடுக்குகள் ஒன்றில் குதித்து ஓடுவது போன்ற தோற்றம் கொண்ட குதிரைகளும் இருக்கும். ஸ்ரீரங்கத்தில் இருக்கும் தேர்க் குதிரைகளுக்கு இறக்கைகளும் உண்டு.

தேரோட்டத்திற்கு முந்தைய நாள் ஒரு சேவலை பலி கொடுப்பது வழக்கம். அன்று, விஷ்ணுவின் சுதர்சன சக்கரத்தின் வடிவமான ஸ்ரீபலியும் சிவனிற்கு திரிசூலமும் வலமாகக் கொண்டு செல்லப்பட்டு தேரோடும் வீதிகளை சரிபார்க்கும் சடங்கு நடக்கும். தேரில் கடவுளை அமரச் செய்து அதன் பின்பு பல நூறு பக்தர்கள் கூடி தேரை ஊர்வலமாக நான்கு வீதிகளிலும் இழுத்துச் சென்று கண்டு மகிழ்கிறார்கள்.

திருமங்கை ஆழ்வாரின் திருவேழுக்குற்றிகை மற்றும் திருஞானசம்பந்தரின் அதே போன்ற பாசுரத்திலும் புராணத்தில் நிகழ்ந்த சம்பவங்களை வைத்து, ஏழு தளத்தில் அடுக்கடுக்காக பாடல் அமைக்கப்பட்டிருப்பது பார்ப்பதற்கு தேர் போன்ற உருவத்தில் தோற்றமளிக்கும்.

## Goratham

This chariot is used in several temples that may not be able to afford the larger one. Temples like Azhwar Tirunagari, Palani, etc., have Gorathams in gold or silver, in addition to others.

In some temples, they are specifically called *Goratham*. There is a possible Maratha origin to this. In some company school paintings from the 19th century, the king is shown seated in an octagonal chariot with an onion-shaped dome. This is a chariot drawn by cows.

The four wheels are connected with axles on which a square wooden base rests. Above these are successive tiers of carved panels or more usually a lotus that ends in an octagonal flat surface. From this, four or eight pillars support a canopy that is modelled on a vimana in the Dravidian style or in the Mughal style. The chariot is at a maximum of 15 feet in height and can be drawn around easily because the iron wheels move fast and the weight of the chariot is not much.

In some temples in Chettinad, such Thers have two painted and clothed terracotta figures of ladies holding flywhisks.

Given the ease of construction compared to the larger ones, they are much more popular amongst new temples or old ones that commission new Thers.

## கோரதம்

பெரிய தேர்களை உபயோகப்படுத்த வசதி இல்லாத பல கோவில்களில் இவை பயன்படுத்தப்படுகின்றன. தங்கத்தினாலோ அல்லது வெள்ளியினாலோ செய்யப்பட்ட தேர்களை உடைய ஆழ்வார் திருநகரி, பழனி போன்ற கோவில்களில் இந்த வகை ரதங்களுடன் மற்ற ரதங்களும் உபயோகத்திலுள்ளன.

சில கோவில்களில் அவை கோரதமென்றே அழைக்கப்படுகின்றன. இது ஒரு மராத்திய தொடர்பினால் வந்த தொடராக இருக்கலாம். 19ம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு சில கிழக்கிந்திய கம்பெனி பாணி சித்திரங்களில் எண்கோண ரதத்தில் மன்னன் அமர்ந்திருப்பதையும் அதனை பசுக்கள் இழுத்துக் கொண்டு செல்வதையும் காணலாம்.

நான்கு சக்கரங்களும், அச்சாணிகளால் இணைக்கப்பட்டு ஒரு சதுர மர பீடத்தைத் தாங்குகின்றன. இதன் மீது சிற்பங்கள் செதுக்கப்பட்ட பல தளங்களும் அல்லது பரவலாக ஒரு தாமரையும் அதன் மேல் எண்கோணச் சதுரப் பலகையும் அமைக்கப்பட்டிருக்கும். இதிலிருந்து நான்கு அல்லது எட்டு தூண்கள் எழுந்து, திராவிட பாணியிலோ அல்லது முகலாய வடிவிலோ உள்ள விமானம் போன்ற அமைப்பு விதானத்தை தாங்குகின்றன. தேர் அதிக பக்ஷமாக 15 அடி உயரம் தான் இருக்குமாதலால், அதன் இரும்புச் சக்கரங்களின் உதவியுடன் அதை எளிதாக இழுத்துச் செல்ல முடியும். ரதத்தின் எடையும் குறைவாகவே இருக்கும்.

செட்டிநாட்டுக் கோவில்கள் சிலவற்றில் சுட்ட மண்ணாலான வண்ணங்கள் பூசப்பட்டு, ஆடை அணிகள் அணிந்துள்ள பெண் பொம்மைகள் சாமரம் வீசுவது போல் தேரின் மேல் அமைக்கப்பட்டிருக்கும்.

பெரிய தேர்களை விட இந்த வகைத் தேர்களை உருவாக்குவது எளிதாக இருப்பதால், புதிதாக எழும்பும் கோவில்களிலும், புதிய தேர்கள் செய்யப்படும் பழைய கோவில்களிலும் பரவலாக இம்மாதிரியான தேர்களே செய்யப்படுகின்றன.

## Procession paraphernalia

Shiva it is said is fond of ablutions, while Vishnu is fond of decorations. Either way, when the procession with the vahana starts, there is as much respect given to the deity, as a king would command. Before the deity is installed on the vahana, there are several rituals that have complex steps. Even a task such as getting the water from the river for the ablution has its own procession and paraphernalia. The clothing and ornamentation of deities with jewels and flowers are also complex and require expertise.

When the procession begins, there are a series of 16 *upacharas* or tasks performed, to show respect. Many of these today, have died out, but some still survive. The Victoria and Albert Museum, London has three beautiful company school paintings, two from Thanjavur and one from Mysore, that depict all these from the 19th century.

The existence of these paraphernalia can be dated even to the 8th century, from sculptures. Raja Raja's detailed lists of gifts made to the Brihadeeswara temple also mention that many of these objects were made of solid gold! Wealthier temples such as Srirangam and the Madurai Meenakshi temple still have some of them in gold, but most others have it in silver or brass or not at all.

Before the vahana leaves the temple, a hand-held mirror (*Aadharj*) is shown to the deity to symbolically get his/her approval on the decorations.

On either side of the vahana, flywhisks or *chaamara* are waved. These are always made from the tail of a white horse. Above the vahana is a *chathri* or umbrella. Some of these can be as much as 22 feet in length. Usually carried as a pair, they ensure that the deity is always shaded. In temples like Srirangam, the deity has a smaller one made of gold for processions within the temple precincts. These three are usually absent when the deity is on the horse vahana as it would be difficult to keep pace if the horse was a real one. The *vyajanam* or hand-held fan is an important paraphernalia as the vahana progresses. These are made of appliquéd cloth held in the palm through a wooden handle. The *gadha* or mace is like a long sceptre that is carried in front by a man, with the finial over his shoulders.

Music and dance were an integral part of the procession. Sadly, the dancers are gone today and the music is just a *nagaswaram* and a *tavil*, in most temples. In the past, before the Devadasi Abolition Act, the devadasi women of the temple would dance in front of the procession and they would be accompanied by several percussion instruments such as the *gondhalam, dakka, pushkaram*, etc. Some of the instruments were even individually carried on an elephant. Wind instruments also included the *kombu* and others.

As the vahana stops in front of houses of the devotees, the deity is offered fruits and also camphor is lit and waved clockwise as an upachara of *deepa*. Torches of fire, flags and fireworks are other paraphernalia. In temples that had an elephant, the elephant will always lead the procession. The other most important upachara is the recitation of the hymns of the deity in Tamil and the chanting of the Vedas. Invariably those who recite the Tamil verses of Shiva or Vishnu go before the vahana, because, in the verses the saints sing of actually having seen God. An upachara offered less frequently today because of a dearth of manpower is the *Tiru-aalavattam*, where as the deity advances, a person who walks backward swirls a large cloth. The Kanchipuram Varadaraja temple and the Srivilliputtur temple still do this on some processions.

As the vahana completes the procession and comes back in, the *tiruvendi-k-kappu* or *kumbha aarti* is performed. This is a metal pot with a single flame on the top. This used to be another prerogative of the temple devadasis in the past. The aarti concludes the procession and is meant to nullify the evil eye that may have been cast during the procession.

## வீதி உலா உபகரணங்கள்

சிவன் அபிஷேகங்களையும் விஷ்ணு அலங்காரங்களையும் அதிகமாக விரும்புவதாகக் கூறப்படுவதுண்டு. இரண்டு கடவுள்களுக்குமே வாகனங்களில் ஏறி ஊர்வலமாக வரும் போது, அரசருக்கு தரப்படும் மரியாதைகள் அனைத்தும் செய்யப்படுகின்றன. வாகனத்தின் மீது மூர்த்தி வைக்கப்படும் முன்பே பல விதிகளைக் கொண்ட வித விதமான சடங்குகள் செய்யப்படுகின்றன. நீராட்டலுக்கு தண்ணீர் கொண்டு வருவது முதலே ஒவ்வொரு செய்கைக்கும், அதற்கென்று ஏற்பட்டுள்ள ஊர்வலம் மற்றும் உபசார சடங்குகள் செய்யப்படும். விக்கிரகங்களுக்கு ஆடைகள் அணிவிப்பதும் புஷ்பம், மற்றும் ஆபரணங்கள் கொண்டு அலங்கரிப்பதும் அதிக திறமை தேவைப்படும் சிக்கலான வேலைகள்.

ஊர்வலத்தின் துவக்கத்திலேயே இறைவனுக்கு மரியாதை செய்யும் வகையில் 16 உபசாரங்கள் செய்யப்படுகின்றன. அவைகளில் பல காலப்போக்கில் கைவிடப்பட்டுவிட்டாலும் சில இன்றும் வழக்கில் இருக்கின்றன. இந்த உபசாரங்களை சித்தரிக்கும் கம்பெனி பாணி 19ம் நூற்றாண்டைச் சேர்ந்த மூன்று (இரண்டு தஞ்சாவூரிலிருந்தும், ஒன்று மைசூரிலிருந்தும்) சித்திரங்களை லண்டன் ஆல்பர்ட் விக்டோரியா காட்சிசாலையில் காணலாம்.

கற்சிலைகளிலிருந்து இந்த உபகரணங்கள் 8ம் நூற்றாண்டிலிருந்தே வழக்கத்தில் இருந்ததாகத் தெரிகிறது. பிருகதீசுவரர் கோவிலுக்கு ராஜ ராஜ சோழன் அளித்த நன்கொடைகளின் பட்டியலில் தங்கத்தாலான பொருட்கள்கள் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. செல்வச் செழிப்பு மிக்க ஸ்ரீரங்கம், மற்றும் மதுரை மீனாக்ஷி கோவில்களிலும் சில தங்கத்தால் செய்யப்பட்டவை; எனினும் பல கோவில்களில் இவை வெள்ளி அல்லது பித்தளையால் செய்யப்பட்டும், சில கோவில்களில் இல்லாமலும் இருப்பதைக் காண முடிகிறது.

ஊர்வலம் புறப்படும் முன், ஆடை அலங்காரங்களைப் பற்றிய அவருடைய ஆமோதிப்பைப் பெறுவதற்கென விக்கிரகத்தின் முன் ஒரு சிறு கைக்–கண்ணாடி காண்பிக்கப்படுகிறது!

வாகனத்தின் இரு புறங்களிலும் சாமரங்கள் வீசப்படும். அவை வெள்ளைக் குதிரையின் வாலிலுள்ள மயிர்களால் செய்யப்பட்டவை. வாகனத்தின் மீது குடை அமைக்கப்பட்டிருக்கும். அவைகளில் சில 22 அடிகள் விஸ்தீர்ணம் கொண்டவை. பொதுவாக இரண்டு குடைகள் விக்கிரகம் நிழலிலேயே இருப்பதை உறுதி செய்கிறது. ஸ்ரீரங்கம் போன்ற இடங்களின் கோவில்களில் ஒரு சிறிய தங்கத்தாலான குடையையும், கோவில்களின் பிராகாரங்களிலேயே எடுத்துச்செல்லப்படும் ஊர்வலங்களில் காணலாம். இவை மூன்றுமே குதிரை வாகனத்தன்று கிடையாது; ஓடும் குதிரையுடன் குடைபிடித்து செல்ல முடியுமா? வாகனம் வலம் வரும் போது வியஜனம் என அழைக்கப்படும் கைவிசிறி மிகவும் முக்கியமான ஒன்று. கையில் பிடிக்க வாகாக உள்ள மரப்பிடியுடன், சித்திர வேலைப்பாடுகள் கொண்ட துணியினால் இவை செய்யப்பட்டு இருக்கும். நீண்டும் நுனியில் உருண்டும் உள்ள கதையை–அதன் தண்டை தோளில் ஏந்தியபடி– ஊர்வலத்திற்கு முன்னால் ஒருவர் எடுத்துச் செல்வார்.

ஆடலும் பாடலும் ஊர்வலங்களின் இன்றியமையாத அங்கங்களாக இருந்தன. ஆடுபவர்கள் இன்றில்லை; மேலும் பாடலும் நாதஸ்வரம், தவில் வாசிப்பவர்களோடு நின்றுவிடுகின்றன. தேவதாசி ஒழிப்புச் சட்டம் அமலுக்கு வரும் முன், கோவிலைச் சேர்ந்த தேவதாசிகள், ஊர்வலத்தின் முன் ஆடும் போது கொண்டலம், டாக்கா, புஷ்கரம் போன்ற பல தாள வாத்தியங்கள் முழங்கும். சில வாத்தியங்கள் அதற்கென்றே அமைந்த யானைகள் மீது கொண்டு செல்லப்படும். ஊதப்படும் வாத்தியங்களான கொம்பு முதலியவைகளும் இருக்கும்.

பக்தர்களின் வீடுகளின் முன்னால் வாகனம் நின்று, பக்தர்கள் கடவுளுக்கு அளிக்கும் பழம், கற்பூரம் போன்றவை ஏற்றுக்கொள்ளப்படும். தீபம் போல கற்பூரம் ஏற்றப்பட்டு விக்கிரகத்தின் முன் சுற்றிக் காட்டப்படும். மற்ற உபசாரச் சின்னங்கள் தீவட்டிகள், கொடிகள் வாணவேடிக்கைகள் ஆகியவை. யானைகள் உள்ள கோவில்களில் யானையே ஊர்வலத்தின் முன் செல்லும். சிவன் மற்றும் விஷ்ணுவைப் பற்றி தமிழ் மறையெனப்படும் தமிழில் இயற்றப்பட்ட பாசுரங்களைப் பாடி வரும் விற்பன்னர்கள், கடவுளை நேரில் கண்டதைப்பற்றி அப்பாசுரங்கள் கூறுவதால், ஊர்வலத்தின் முன்னே செல்வது ஊர்வல உபசாரங்களில் முக்கியமான ஒன்று. சரியான ஆள் கிடைக்காததால் கைவிடப்பட்ட ஒரு உபசாரம் திரு ஆலவட்டம். இதில் ஊர்வலத்தின் முன்னால், ஒருவர் பெரிய துணி ஒன்றை வீசிக்கொண்டே ஊர்வலத்தைப் பார்த்தபடி பின் பக்கமாக நடந்து செல்வார். காஞ்சி வரதராஜர் கோவிலிலும், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோவிலிலும் சில ஊர்வலங்களின் போது இது இன்றும் செய்யப்படுகிறது.

வாகனத்தின் மீது எழுந்தருளியிருக்கும் மூர்த்தி, கோவிலை அடையும் போது திருவேந்திக் காப்பு அல்லது கும்ப ஆரத்தி என்னும் உலோகத்தால் ஆன பானையின் மேல் ஒற்றை தீபம் ஏற்றி வழிபடுவது வழக்கம். பண்டைய காலங்களில் இந்த உபசாரம் செய்வதும் தேவதாசிகளின் உரிமையாக இருந்தது. ஊர்வலத்தின் போது இறைவனுக்கு நேர்ந்திருக்கக்கூடிய கண் திருஷ்டியைக் களையும் விதமாக இந்த ஆரத்தி செய்யப்படுவதுடன் ஊர்வலம் முடிவடைகிறது.

# Glossary

| | | |
|---|---|---|
| 1. | Agni | God of fire in Hindu mythology. |
| 2. | Anjali mudhra | A gesture of holding both palms together, as a salutation. |
| 3. | Apsaras | Celestial maidens renowned for their beauty and expertise in the arts. |
| 4. | Artha Shastra | An ancient Sanskrit text authored by Kautilya on statecraft and politics dated to 300-200 BCE. |
| 5. | Bhairava | An incarnation of God Siva. |
| 6. | Brahma | The creator and an important god in Hinduism. |
| 7. | Brahma Purana, Harivamsa Purana, Linga Purana, Vayu Purana, Agni Purana, Skanda Purana | Each one is a purana. See Puranas. |
| 8. | Brahmotsavam | A festival usually for ten days where the processional deity is paraded twice every day. There are also several other rituals that are conducted. |
| 9. | Chamundi | A female deity of horrific aspect in Hindu mythology. |
| 10. | Civakachinthamani | One of the 5 great epics in ancient Tamil literature. It follows the story of Kovalan's daughter Manimekalai and has a strong Jain theme. See *Silapadikaram*. |
| 11. | Darba | A sacred grass for the Hindus. |
| 12. | Deepa | Lamp. |
| 13. | Deva | A celestial or divine being in Hindu mythology. |
| 14. | Devadasi | Women dedicated to serve in the temple. Most of them were accomplished dancers and singers. The practice was abolished in Tamil Nadu in the 20th century. |
| 15. | Gopuram or gopura | The entrance tower to a temple. The tower over the sanctum is called the vimana. |
| 16. | Indra | The king of the celestials and an important deity in ancient Hindu mythology. |
| 17. | Javalis | Shorter and simpler versions of Padams, less classical in nature. |
| 18. | Kalithokai | An ancient Tamil text of poems. |
| 19. | Kandhar Kalivenba | A poetical metre used in Tamil poetry. |
| 20. | Ketu | One of the nine planets in Hindu cosmology. Ketu and Rahu are considered shadow planets. |

| | | |
|---|---|---|
| 21. | Kubera | A demi-god associated with wealth in Hindu mythology. |
| 22. | Kuravai koothu | An ancient form of dance that has no agreed-upon modern equivalent. |
| 23. | Lakshmi | Goddess of prosperity, wife of Vishnu. |
| 24. | Linga | The column-shaped symbol of Shiva. |
| 25. | Mandapam | A pillared cloister in a temple. |
| 26. | Mathsya Purana | See Purana. |
| 27. | Nagaswaram | Wind instrument in the shape of a long wooden pipe, considered as an auspicious instrument. The Tiru Chinnam is smaller and played in pairs by the same person. |
| 28. | Nairuthi | Goddess (or demon) of the South-west direction. |
| 29. | Navagrahas | Representations of the nine planets in Hindu mythology. They are widely installed in Siva temples and offered worship. |
| 30. | Neer mor | Buttermilk. |
| 31. | Paanagam | A drink popular in summer made of water, jaggery and other condiments. |
| 32. | Padams | A genre of Carnatic music that has love as a theme. Padams are rich in metaphor. |
| 33. | Pancharatra agama | One of the worship protocols that govern worship in Vishnu temples. |
| 34. | Patirrupattu | An ancient Tamil text of poems. |
| 35. | Perumbanatrupadai | An ancient Tamil text of poems. |
| 36. | Puranas | Ancient texts that contain many mythological stories. There are several puranas and their dates are not agreed upon by all scholars. Most are however older than the 12th century. |
| 37. | Saptamatrikas | Seven sisters are seven female representations of seven Hindu gods. They are believed to guard common village property like water tanks. They are, Vaishnavi, Varahi, Maheshwari, Kaumari, Chamundi, Indrani and Brahmi. |
| 38. | Silapadikaram | Authored by Ilango Adigal, this Tamil epic tells the story of Kovalan and Kannagi. It is an invaluable resource for literary references to life in the Tamil country in the beginning of the Christian era. |
| 39. | Sthapathi | A master craftsman who works on stone or wood. |
| 40. | Tannumai | A drum used for music. |
| 41. | Tavil | Cylindrical percussion instrument that is played with the fingertips and a small stick. |
| 42. | Tevaram | The collection of hymns of Tamil Saivite saints. |
| 43. | Thiruvizha | A festival. |
| 44. | Thunagai koothu | An ancient form of dance that has no agreed upon modern equivalent. |
| 45. | Tiruchinnamaalai | A work in Tamil by Vedanta Desika on the deity in the Varadaraja temple in Kanchipuram near Madras. |

46. Tirumurai — Sacred Tamil texts in praise of Siva, 12 in number. Tevaram is among the 12.

47. Tirumurugatrupadai — An ancient Tamil text of poems.

48. Upachara — Literally respectful gestures, in the context of worship of God.

49. Vaikhanasa agama — One of the worship protocols that govern worship in Vishnu temples.

50. Varuna — God of water in Hindu mythology.

51. Vayu — God of wind in Hindu mythology.

52. Veena — A stringed instrument popular even today.

53. Vellottam — A trial run.

54. Yali — Mythical beasts that combine the forms of a lion & elephant.

55. Yudhakandam, Kamba Ramayana — A chapter in the Ramayana authored by Kamban in Tamil in the 12th century ACE.



## Note:

1. The Tamil calendar months are used in the text with Gregorian calendar months in parenthesis. To understand the timing of temple festivals, a basic knowledge of the Tamil calendar will help. The Tamil New Year follows the vernal equinox and generally falls on April 13th or 14th of the Gregorian year. It is therefore a solar calendar while the Sanskrit calendar is luni-solar. April 13th or 14th marks the first day of the traditional Tamil calendar. This is similar to many other traditional calendars in India and Asia. The years in most such calendars, including China, follow a 60-year cycle said to be related to the 5 revolutions of Jupiter. After the completion of 60 years, the calendar starts anew with the first year. This corresponds to the Hindu 'century.' The Vakya or Tirukanitha Panchangam (the traditional Tamil almanac) outlines this sequence.
2. The days of the Tamil calendar relate to the celestial bodies in the solar system: Sun, Moon, Mars, Mercury, Jupiter, Venus, and Saturn, in that order. The week starts with Sunday. The number of days in a month varies between 29 and 32. The Sanskrit months start one month ahead of the Tamil months because the Tamil calendar is a solar calendar.

## குறிப்பு:

1. இடை வாக்கியக் குறிகளில் கிரகோரியன் கால அட்டவணையின் பெயர்களுடன் தமிழ் மாதங்களின் பெயர்களே முக்கிய உரையில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. கோவில்களில் உற்சவங்கள் நடைபெறும் காலங்களை துல்லியமாக கணக்கிட தமிழ் மாதங்களைப் பற்றிய அடிப்படை அறிவு இருப்பது உதவியாக இருக்கும். கிரகோரியன் கணக்குப்படி ஏப்ரல் மாதம் 13 அல்லது 14 தேதிகளில், இந்திய கணக்கில் சூரியனின் வடக்கு நோக்கிய பயணமான உத்தராயண காலத்தில் தமிழ் புது வருடம் அமைகிறது. அதனால் அதுவும் சூரியனின் போக்கின்படி அமைந்த ஒன்றே; சம்ஸ்கிருத வானிலைக் கால அட்டவணை சந்திரன்–சூரியன் போக்கை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளது. ஏப்ரல் 13 அல்லது 14 தேதி, தமிழ் கால அட்டவணையின் முதல் நாளாகக் குறிப்பிடப்படுகிறது. இது இந்தியாவிலும் ஆசியாவிலும் நடைமுறையில் உள்ள வேறு பல அட்டவணைகளை ஒத்தது. சீனாவில் வழக்கில் உள்ளது உட்பட பெரும்பாலான இந்த கால அட்டவணைகள் குருவின் ஐந்து சுழற்சிக் காலங்களைக் குறிப்பிடும் வகையில் 60 வருட சக்கரங்களாகவே உள்ளன. 60 வருட சுழற்சிக்குப் பின் மீண்டும் ஒன்றிலிருந்து கணக்குத் துவங்குகிறது. இது இந்துக்களின் நூற்றாண்டெனச் சொல்லலாம். வாக்கிய அல்லது திருக்கணித பஞ்சாங்கங்கள் (தமிழ் கால அட்டவணை) இந்த தொடரையே ஒட்டி இருக்கின்றன.
2. சூரிய மண்டல வானிலை அமைப்பில் அமைந்துள்ள, தமிழ் நாட்காட்டிகளில் நாட்கள் கிரகங்களை ஒத்து அழைக்கப்படுகின்றன. அவை சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி மற்றும் சனி என்ற வரிசையில் வருகின்றன. வாரம் ஞாயிறுடன் ஆரம்பமாகின்றது. ஒரு மாதத்தில் 29 முதல் 32 நாட்கள் இருக்கின்றன. சம்ஸ்கிருத மாதங்கள், சூரியனின் போக்கை ஒத்து அமைந்துள்ள தமிழ் மாதங்களுக்கு ஒரு மாதம் முன்பாக வருகின்றன.

## About the Author

**Pradeep Chakravarthy** (B.1975) hails from Ananthakrishnapuram, a village near Tirunelveli. But for all practical purposes, he is a proud Madrasi.

He studied at the J. Krishnamurthy Foundation's school and Madras Christian College in Madras. He then studied in the Jawaharlal Nehru University, New Delhi and obtained an MBA in HR at the London School of Economics. Returning to Madras in 1998, Pradeep worked briefly with companies in manufacturing and a BPO before joining the leadership coaching team of a major Indian IT giant.

The author is a Carnatic music aficionado but listens mostly to *padams* and *javaliṣ*. He is an accomplished aquarist as well—he tries to breed native Indian fish, and is the editor of an Internet-based forum on aquariums.

His abiding passion is writing. He is a columnist for the *Hindu Businessline*, where he writes on leadership. He has published more than a 100 articles, many of them about temples—invariably those less-known—in leading dailies. A book compilation will be out soon.

Another book, on the cultural heritage of Thanjavur is scheduled for release later in 2010, which is also the 1000th year of the consecration of the Thanjavur Brihadeeswara temple. The 60,000-word book documents the development of painting, music, dance, drama, and crafts in Thanjavur. It includes a never-before analysis of the names of the streets within the Thanjavur fort, and a study of the daily lives of the Marathas including their cuisine. Another attraction: more than 300 photographs, many rare and never published before.

During the past few months, the author has been conducting weekend temple walks that are free and open to all and focus on the role of the temple in the literature, economics and politics of the society around it. He hopes that his walks will inspire people to look at temples beyond only religion and as record houses of how people in the past grappled with problems we face today as well.

He lives in Chennai with his wife Anusha and son Raghavan.

## ஆசிரியரைப் பற்றிய குறிப்பு

**ப்ரதீப் சக்கரவர்த்தி 1975ல்** திருநெல்வேலியில் பிறந்து அருகில் உள்ள அனந்தகிருஷ்ணபுரம் என்னும் கிராமத்தில் வளர்ந்தவரெனினும் தன்னை சென்னைவாசி என்று கூறிக் கொள்வதில் பெருமை கொள்பவர்.

அவர் சென்னையின் ஜே.கிருஷ்ணமூர்த்தி பள்ளியில் பள்ளிப் படிப்பும், சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில் அரசியல் கலையில் இளங்கலைப் பட்டமும், புது டில்லி ஜவஹர்லால் பல்கலைக்கழகத்தில் பன்னாட்டு உறவுகள் என்ற பாடத்தில் முதுகலைப் பட்டமும், லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ் கல்லூரியில் எம்.பி.ஏ (மனித வளத்துறை) பட்டமும் பெற்றவர். 1998ல் சென்னைக்குத் திரும்பிய இவர், சில காலம் உற்பத்தி நிறுவனங்களிலும், பி.பி.ஓக்களிலும் வேலை செய்த பிறகு, ஒரு பெரிய இந்திய தகவல் தொழில்நுட்ப நிறுவனத்தில் தலைமைப் பொறுப்பில் இருக்கிறார்.

கர்நாடக சங்கீத ஆர்வலர், பெரும்பாலும் பதங்கள், ஜாவளிகளை விரும்பிக் கேட்பவர். மீன்வள மேம்பாட்டிலும் கவனம் செலுத்துபவர் – இந்திய நாட்டிற்கே உரித்தான மீன் வகைளை வளப்படுத்துவதில் நாட்டம் கொண்டுள்ளார்; மீன் காட்சிசாலைகளைப் பற்றிப் பேசும் ஒரு கணினி பத்திரிகையின் ஆசிரியரும் கூட!

அவருடைய எழுத்துடனான காதல் குறிப்பிடத்தக்கது. ஹிந்துவின் பிஸினஸ் லைனில் அவர் தலைமைப் பண்புகளைப் பற்றி எழுதும் ஒரு தனிப் பத்தி உள்ளது. இவர் பல முன்னணி பத்திரிகைகளுக்காகவும் படைத்துள்ள நூற்றிற்கும் மேற்பட்ட கட்டுரைகளில் பெரும்பான்மையானவை கோவில்களை – அதிகம் அறியப்படாத கோவில்கள் – பற்றியவை. அவைகளின் ஒரு தொகுப்பு விரைவில் வெளிவர உள்ளது.

தஞ்சாவூர் பிருகதீசுவரர் கோவிலின் கலாசார மரபைப் பற்றிய இவருடைய புத்தகம் இந்த ஆண்டின் இறுதிக்குள் வெளி வருகிறது; அக்கோவில் முதன் முதலாக கும்பாபிஷேகம் செய்யப்பட்டு 1000 ஆண்டுகளான இந்த வருடத்தில் அப்புத்தகம் வருவது ஒரு சிறப்பு. 60,000 வார்த்தைகளைக் கொண்ட இந்தப் புத்தகம் தஞ்சாவூரின் கலைகளின் – சித்திரம், இசை, நாட்டியம், நாடகம் மற்றும் பல்வேறு கைவினைகள் – வளர்ச்சியைப் பதிவு செய்கிறது. தஞ்சாவூர் கோட்டையின் உள்ளே இருக்கும் தெருக்களின் பெயர்களை இப்புத்தகத்தில் அலசுவதும், மராத்தியர்களின் தினசரி வாழ்க்கையைப் பற்றிய தகவல்கள் – அவர்களின் சமையல் குறிப்புக்கள் உள்பட – இதுவரை எவரும் மேற்கொள்ளாத ஒன்று. மற்றொரு சிறப்பம்சம், இதுவரை பிரசுரிக்கப்படாத 300 புகைப்படங்களை இப்புத்தகம் தாங்கி வருமென்பதுதான்.

அவர் வார இறுதியில் கோவில்களில் இலவசமாக நடைகள் ஏற்பாடு செய்து அதன் மூலம் மதத்திற்கு அப்பாலும் சென்று இலக்கியம், பொருளாதாரம், அரசியல் ஆகிய துறைகளில் கோவில்கள் வகித்த பங்கை எடுத்துக் கூறுகிறார். இவரது யாத்திரைகள் மதம்சார்ந்த நோக்கத்திற்கும் மேலாக, பிரச்சினைகளை இன்றைய காலகட்டத்தைப்போல அன்று மக்கள் எவ்வாறு சமாளித்தனர் என்று தெரிய உதவுகிறது என நம்புகிறார்.

அவர் சென்னையில் தன் மனைவி அனுஷா மற்றும் மகன் ராகவனுடன் வசிக்கிறார்.

## References:


1. Balusamy, S., *Arjunan Thapasu-Mamallapurathin Imaya Sirpam*, Kalachuvadu Pathippagam, Nagarkoil, 2009
2. Gopinatha Rao, T. A., *Elements of Hindu Iconography*, Motilal Banarsidas, New Delhi, 1997
3. Mani, Vettam, *Puranic Encyclopaedia*, Motilal Banarsidas, New Delhi, 2002
4. Mudaliar A. Singaravelu, *Abithana Chintamani*, Asian Educational Services, New Delhi, 2001
5. Saminatha Iyer, U. Ve. *Palapattai Chokkanatha Pillai Ezhuthiya Azhagar Killi Vidu Thoothu*, Kesari Printers, Madras, 1914
6. Raghavan, V. K. S. N., *The Tiruvelukutrrirukkai*, *Indian Philosophical Annual*, Vol. 18, University of Madras, Madras, 1985-1986
7. Sengalvarayar Pillai, T. V. S., *Murugadevar Panniru Tirumurai*, Meenakshikalyanasundaram, Madras, 1957


## Author's Note:


The invitations for the festivals published by many temples were made available to me by Smt. V. Banu, Sri B. Narasimhan, Sri Vasan Bhattacharyar, Sri K. V. Varadarajan and Smt. S. Sujatha.


## ஆதார நூல்கள்:


1. பாலுசாமி, எஸ், "அர்சுனன் தபஸு – மாமல்லபுரத்தின் இமய சிற்பம்", காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில், 2009.
2. கோபினாத் ராவ், டி ஏ, "எலிமெண்ட்ஸ் ஆஃப் ஹிந்து இகனோகிராபி" மோதிலால் பனார்சிதாஸ், புது டில்லி, 1997.
3. மணி, வெட்டம், "புராணிக் என்சைக்லோபீடியா" மோதிலால் பனார்சிதாஸ், புது டில்லி, 2002.
4. முதலியார் ஏ சிங்காரவேலு, "அபிதான சிந்தாமணி", ஆசியன் எஜுகேஷனல் சர்விஸ், புது டில்லி, 2001.
5. சாமிநாத அய்யர், உ வே, "பலப்பட்டி சொக்கநாத பிள்ளை எழுதிய அழகர் கிள்ளி விடு தூது", கேசரி பிரிண்டர்ஸ், மதராஸ், 1914.
6. இராகவன், வி கே எஸ் என், "திருவேலுக்குற்றிருக்கை", இந்தியன் ஃபிலசோபிகல் ஆன்னுவல், பாகம் 18, மதராஸ் பல்கலைக்கழகம், மதராஸ், 1985–86.
7. செங்கல்வராயர் பிள்ளை, டி வி எஸ், "முருக தேவர் பன்னிரு திருமுறை", மீனாக்ஷி கல்யாணசுந்தரம், மதராஸ், 1957.


## நூலாசிரியர் குறிப்பு:


பல கோவில்களின் அழைப்பிதழ்களை அளித்துதவியவர்கள்: ஸ்ரீமதி வே பானு, ஸ்ரீ பி நரசிம்ஹன், ஸ்ரீ வாசன் பட்டாச்சார்யார், ஸ்ரீ கே வி வரதராஜன், மற்றும் ஸ்ரீமதி எஸ். சுஜாதா.

**V Vijayakumar – Pencil Sketches**

After his Bachelors in Fine Arts, Vijayakumar is busy working on various art–related subjects. He is working towards establishing himself in the creative world where his passion lies.

**Padma Narayanan – Tamil Translation**

A Chennai based writer and translator, Padma Narayanan has been busy for over a decade and a half doing that which is close to her heart. She contributes to *The Hindu* and *Eves Touch*.

**Rukmini Amirapu – Copy Editing**

Apart from acquiring her doctorate in English, Rukmini Amirapu has a variety of interests to pursue - editing, community service, trekking, motor rallying et al. She is founder and promoter of ‘bookandborrow’, a online book rental service.

**வி. விஜயகுமார் – பென்சில் சித்திரங்கள்**

இளநிலை மென்கலைப்பட்டம் பெற்ற விஜயகுமார் கலை சம்பந்தப்பட்ட பல்வேறு அலுவல்களில் ஈடுபட்டுள்ளார். தற்போது தனக்குப் பிடித்த கலையுலகத்தில் தனக்கென ஓரிடத்தைப் பெற முனைந்துள்ளார்.

**பத்மா நாராயணன் – தமிழ் மொழிபெயர்ப்பு**

சென்னையில் வாழும் எழுத்தாளரும் மற்றும் மொழிபெயர்ப்பாளருமான பத்மா நாராயணன் கடந்த 15 வருடங்களுக்கு மேலாக தனக்கு விருப்பமான இப்பணியைச் செய்து வருகிறார். இவர் ‘தி ஹிந்து’ மற்றும் ‘ஈவ்ஸ் டச்’ என்னும் பத்திரிகைகளுக்கும் எழுதி வருகிறார்.

**ருக்மிணி அமிராபு – காப்பி எடிட்டிங்**

ஆங்கிலத்தில் முனைவர் பட்டம் பெற்றுள்ள ருக்மிணி அமிராபு பல துறைகளிலும் ஈடுபட்டுள்ளார். எடிட்டிங், சமூக சேவை, நடை பயணம், மோட்டார் வண்டி பந்தயம், போன்றவை சில. மேலும் இவர் இணையதளம் மூலம் புத்தகங்களை வாடகைக்கு ஆர்டர் செய்து படிப்பதற்கு வசதியான ‘புக்அன்ட்பாரோ’ என்ற சேவையை துவக்கி இயக்கி வருகிறார்.

